கழக வெளியீடு :—௫௧0

# காப்பியக் கதைகள்

(ஐந்தாம் புத்தகம்)

## க. நரவாணன்
## உ. திவிட்டன்



புலவர் அரசு அவர்கள்



:: திருநெல்வேலித் தென்னிந்திய ::
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி :: சென்னை, 1.

# பதிப்புரை

மாணவர்களுக்குக் கதைகளில் விருப்பம் அதிகம். இனிய தமிழ்நடையில் அமைந்து விளங்கும் சுவையான கதைகள் அவர்கள் ஆவலை நிறைவேற்றுவதுடன் தமிழ் மொழி யறிவையும் வளர்க்கின்றன.

தமிழ் மொழியிலுள்ள காப்பியங்கள் ஒவ்வொன்றும் சுவையான பல்வகை நயங்களும் நிறைந்தவை. அவற்றைக் கற்றுப் பயன்பெறவேண்டும் என்ற எண்ணம் இளமாணவர் உள்ளங்களில் முகிழ்க்கவேண்டும். முகிழ்ப்பின் பெரியவர்களாகுங் காலத்தில் தமிழ் மொழியில் நல்ல தேர்ச்சியும் ஆர்வமுங் கொண்டு விளங்க ஏதுவாகும். எனவே, காப்பியங்களில் பயின்றுவரும் கதைகளை இளமாணவர் விரும்பும் முறையில் எளிய இனிய தமிழ்நடையில் வெளியிட எண்ணினோம்.

திரு. புலவர் அரசு அவர்கள் மிகவும் சிறப்பான முறையில் அக்கதைகளை ஆக்கித்தந்துள்ளார்கள். கதைகளை விளக்கும் ஓவியங்களும் அங்கங்கே சேர்க்கப்பெற்றிருக்கின்றன.

இவ்வரிசையில் முன்னர் சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி, உதயணன் ஆகிய நான்கும் வெளிவந்தன. இப்போது ஐந்தாவதாக நரவாணன், திவிட்டன் இரண்டு வரலாறுகளும் ஒரே நூலாக வெளிவருகின்றது.

'மாணாக்கர்களும், ஆசிரியர்களும், பொதுமக்களும் இந்நூலை நன்கு வரவேற்பார்கள் என நம்புகின்றோம்.

திருவள்ளுவர் ஆண்டு, ௧௯௮௦,
கார்த்திகை, 22-11-49. } சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்

## பொருளடக்கம்



குஞ்சுக்கு இரையூட்டும் தாய்ப்புறாவை வாசவதத்தை
வியப்புடன் பார்த்தல்

[பக்கம் 4.]

# நரவாணன்



## 1. நரவாணன் பிறப்பு

வத்தவ நாடு என்று ஒரு நாடு இருந்தது. அதன் தலைநகர் கௌசாம்பி. அந்த நாட்டின் அரசன் சதானிகன் மகன் உதயணன். அவனுக்கு வாசவதத்தை, பதுமை, வாசவதத்தையின் சிற்றன்னை மகளான வாசவதத்தை, விரிசிகை என்று நான்கு பட்டத்தரசிகள் இருந்தனர். அவன் தோழர்கள் யூகி, உருமண்ணுவா, வயந்தகன், இடவகன் என்று நால்வர் இருந்தனர். அவர்கள் மந்திரிகளாகவும் விளங்கினர்.

ஒருநாள், உதயணன் அரசசபையில் வீற்றிருக்கும் போது, சில வணிகர்கள் வந்தார்கள். அவர்கள் மிகுந்த நல்லொழுக்கமுடையவர்கள். அவர்கள் ஒரு வழக்கைக் கொண்டுவந்தார்கள். அதை விசாரித்துத் தீர்ப்பளிக்கும்படி, உருமண்ணுவாவுக்குக் கட்டளையிட்டான் அரசன். உருமண்ணுவா அவர்கள் வழக்கைப் பலவகையாலும் ஆராய்ந்து தீர்ப்பளித்தான். பிறகு, அரசனிடம் வந்து அதன் வரலாற்றைக் கூறினான். அந்த வழக்குச் சந்ததியில்லாத குறையை விளக்கியது. அரசன் அவ்வழக்கின் வரலாற்றிலிருந்து தனக்குச் சந்ததியில்லாததை நினைத்துக் கலங்கினான். பிறகு, சபை கலைந்தவுடன், தன் அரண்மனைக்குச் சென்று, வாட்டமுடன் இருந்தான்.

அப்போது பட்டத்தரசிகளில் முதல்வியான வாசவதத்தை, பெரியோர்களுக்கெல்லாம் உபசாரத்துடன் உணவளித்துவிட்டு, அவர்களுடைய வாழ்த்தைப் பெற்று, ஓரிடத்தில் இருந்தாள். அவளிருந்த கூடத்திலே ஒரு புரு தன் வாயிலிருந்த அரிசியைத் தன் குஞ்சுக்கு அன்புடன் ஊட்டுவதைப் பார்த்தாள். அதைப்பார்த்த போது தாய்ப்புருவின் அன்பின் பெருமை அவள் உள்ளத்தை உருக்கியது. தனக்கும் ஒரு குழந்தையிருந்தால், அன்புடன் பாராட்டிக் கொஞ்சிக் குலாவலாமே என்ற எண்ணம் உண்டாகியது.

உதயணன் அன்றைய இரவு துயிலும்போது, நடு இரவில் ஒரு கனவு கண்டான். அக்கனவில் ஒரு தெய்வ மங்கை வந்தாள். அவள் உதயணனை வணங்கி, 'எங்கள் அரசனான குபேரன் தங்களை அழைத்துவரக் கட்டளையிட்டார்.' என்றாள். உதயணன், 'வாசவதத்தையை என்னுடன் அழைத்துவர என்மனம் விரும்புகிறது. அவ்வாறு அழைத்துச் செல்வாயோ?' என்று கேட்டான். அவளும் ஒப்புக்கொண்டாள்; இருவரையும் இரு கையில் ஏந்தினாள்; வான வழியே சென்றாள்; குபேரனை அடைந்தாள்; குபேரன் அவர்களை வரவேற்றான். அன்புடன் ஒரு சிங்காசனத்தில் வீற்றிருக்கச் செய்தான்.

அப்போது, அவர்களை அழைத்துவந்த தெய்வப் பெண் ஒரு மணிமுடியைக் கொண்டுவந்து குபேரன் கட்டளைப்படி உதயணன் கையிற் கொடுத்தாள். பிறகு, உதயணன் வாசவதத்தையுடன் தன் நகரடைந்தான்; அந்த மணிமுடியை அவளிடங் கொடுத்தான். அவள் அதைத் தன் மார்பிற் சேர்த்தாள். அது அவள் வயிற்றிற் புகுந்தது. அவள் அஞ்சித் திடுக்கிட்டெழுந்தாள். அவனும் அஞ்சியெழுந்தான்.

உதயணன் இக்கனவின் பயனை அறியவிரும்பினான். அவனுக்குப் பழக்கமான முனிவரொருவர் அப்போது வந்தார். அவர் அக்கனவைக்கேட்டு, 'வெள்ளிமலையை ஆளும் ஒரு மகனை நீ பெறுவாய்' என்றார். உதயணன் அவரை மறுபடியும் வணங்கி, மகிழ்வுடன் வாசவதத்தையிடம் கூறினான். அவள் வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தாள். வெள்ளிமலை கந்தர்வலோகத்தில் இருக்கிறது. மனிதன் அந்த உலகை ஆள்வது வியப்பல்லவா?

பிறகு, வாசவதத்தை கருவுற்றாள். அப்போது ஒருநாள் இரவு விடியற்காலையில் வானத்திலிருந்து வெள்ளையானை ஒன்றுவந்து அவள் வயிற்றில் நுழைந்தது போலவும், பிறகு, அதை உமிழ்ந்ததாகவும் அது இறகுகளுடன் பறந்துசென்று வெள்ளிமலையை அடைந்து, அங்கிருந்த ஒரு சூரியனை விழுங்கியதாகவும் கனவு கண்டாள். அதை உதயணனுக்குக் கூறினாள். அவன் 'இது தான் முன்கண்ட கனவைப்போன்றதே' என்று கூறி மகிழ்ந்தான்.

மற்றொருநாள், வாசவதத்தைக்கு வானத்திற் பறந்து சென்று பல இடங்களையும் பார்க்கவேண்டுமென்ற விருப்பம் உண்டாயிற்று. அதே கவலையாக வாடி இருந்தாள். அவள் வாட்டத்தைக்கண்டு உதயணன் வினவினான். அவள் வெட்கத்துடன் ஒன்றுமில்லையென்றாள். பிறகு, வற்புறுத்திக் கேட்டதன்மேல் அந்த ஆசையைக் கூறினாள். உதயணன் அதைக்கேட்டு அதை முடிப்பதற்குரிய வழியை அமைச்சர்களுடன் ஆராய்ந்தான்.

அப்போது உருமண்ணுவா, 'நம் இளமைக்காலத்தே ஒருநாள் வேட்டையாடச் சென்றோம். அப்போது நீர்

வேட்கையால் வருந்தியபோது, ஓர் இயக்கன் வந்து தனித்தான். அவன் நம் விருப்பத்தின்போது வந்து அதனை முடிப்பதாகக் கூறினான். இது தங்களுக்கும் நினைவிருக்கும். அவனை நினைப்போம். அவனால் காரியம் முடியும்' என்று கூறினான். அவனைத் தியானிப்பதற் குரிய மந்திரத்தையும் சொல்லிக் கொடுத்தான். அந்த மந்திரத்தை உருமண்ணுவாவுக்கு அந்த இயக்கனே கூறியிருந்தான்.

உதயணன் அம்மந்திரத்தைத் தூய்மையுடன் ஓதத் தொடங்கினான். சில நாட்களில், அந்த இயக்கன் வந்து அவன் முன்னே நின்றான். உதயணன் அவனை வணங்கி, ஆசனங் கொடுத்து இருக்கும்படி வேண்டினான். அவன், 'உதயணனே! உன்னை உஞ்சையரசன் மாய யானையாலே சிறைப்படுத்தினபோதும் என்னை நினைக்கவில்லை. வேடர்களிடம் அகப்பட்டபோதும் என்னை நினைக்க வில்லை. மகத நாட்டிலே பதுமையை மணக்க வழி தெரியாமல் வருந்தியபோதும் என்னை நினைக்கவில்லை. உன் பகையரசன் ஆருணியோடு போர் செய்தபோதும் என்னை நினைக்கவில்லை. இப்போது மட்டும் ஏன் நினைத்தாய்?' என்று அன்புடன் வினவினான்.

உதயணன் வணங்கி, 'அவைகளெல்லாம் என் வலிமையாலே போக்கிக்கொள்ளக் கூடியவை. இப்போது வாசவதத்தை எங்களால் முடியாததை நினைத்தாள். அது தங்களால் முடியும். ஆகையால், நினைத்தேன்' என்றான்.

அந்த இயக்கன் மகிழ்ந்து 'வாசவதத்தையின் வயிற் றிலிருப்பவன் வித்தியாதர சக்கரவர்த்தியாவதற் குரிய வன். அதற்குரிய நல்வினையைக் கூறுகிறேன்' என்று கூறத்தொடங்கினான்:-

"விந்தமலையின் பக்கத்திலே, நருமதையாற்றின் கரையிலே, பருப்பதமென்னும் ஒரு குன்றின்மேல், குபேரன் ஒருநாள் இனிமையாகப் பொழுது போக்கிக் கொண்டிருந்தான். அப்போது மலருந் தளிருங் கொய்து வர வேண்டுமென்று பத்திரை என்னும் தெய்வப் பெண்ணொருத்தியை அனுப்பினான். அவள் அங்குள்ள இயற்கைக் காட்சிகளிலே ஈடுபட்டு மலர் முதலியவற்றைப் பறித்துக்கொண்டாள். அவ்வழியே, ஒரு பெண்யானை சென்றது. அதை அவள் கண்டாள். அதன் நடையையுந் தோற்றத்தையுங் கண்டு வியந்து பார்த்துக்கொண்டே யிருந்தாள். அது சென்ற பிறகு, காலமாய் விட்டதேயென்று கலங்கிப் பறித்த தளிரையும் மலரையுங் கொண்டுவந்து நடுக்கத்துடன் குபேரனிடம் அளித்தாள்.

"குபேரன் சினங்கொண்டு, 'பெண்யானையைப் பார்த்து மயங்கி வேலையிலே தாமதித்தபடியால் நீ பெண் யானையாகப் பிறப்பாய்' என்று சாபமிட்டான். அவள் அஞ்சிப் பணிந்து பிழை பொறுக்க வேண்டினாள். 'நீ உஞ்சையிலே ஒருபெண்யானையாகப் பிறப்பாய் அவன் அங்கே இருக்கும்போது உதயணனுக்கு உஞ்சையரசனால் கொடுக்கப்படுவாய்' அவன் தன் காதலி வாசவதத்தையுடன் உன் மீதேறிக்கொண்டு கௌசாம்பியை நோக்கி வரும்போது காலவேகம் என்னும் நோயாலும் பசியின் சோர்வாலும் நீ விழுந்து விடுவாய். அப்போது உதயணன் பஞ்சமந்திரம் என்னும் மந்திரத்தை உன் காதில் உபதேசிப்பான். அதனால், நீ அப்பிறப் பொழிந்து முன்போல் தெய்வப்பிறப்பை அடைவாய்' என்றான். அப்படியே நிகழ்ந்து அவள் பழம்பிறப்பை அடைந்தாள்.

"அந்தப் பத்திரை உன்னாலே தனக்குத் தன் தெய்வப் பிறப்புக் கிடைத்ததால் உனக்குக் கைம்மாறு செய்யத் தீர்மானித்தாள். அவள் ஒருநாள் சமயம்பார்த்து குபேரனை வணங்கி, 'ஒரு சிறு வரம் எனக்கருள வேண்டும்' என்று வேண்டினாள். அவன், 'நீ விரும்பியதை அளிப்பேன். மறையாமல் உரைப்பாயாக' என்றான். அவள், 'யான் யானைப் பிறப்பாக இருக்கும் போது பிரச்சோதவன் நகரிலிருந்து என்மேல் ஊர்ந்து வந்த உதயணன் நான் சோர்ந்து விழுந்தவுடனே தன் காரியம் முடிந்ததென்று நினையாமல் என் காதிலே பஞ்சமந்திரத்தை உபதேசித்தான். அதனாலே, தெய்வப் பிறப்பை அடைந்தேன். மேலும், நான் செய்த உதவியைப் பாராட்டி என் உடம்பைத் தடவிக் கொடுத்துக் கண்ணீர் வடித்தான். நான் யானைப் பிறப்பை விட்டவுடன் நீர்க்கடனும் முடித்தான். அத்தகையவனுக்கு ஒரு மகன் உண்டாக வேண்டுமென்று வேண்டிக்கொள்கிறேன்' என்றாள். குபேரன் புன்முறுவலுடன், 'உன் நன்றியறிவுக்கு மகிழ்கிறேன். உதயணனும் உயர்ந்த குணங்களுடையவன். ஆகையால், அவனுக்குச் சிறந்த மகனொருவன் பிறக்க வரந் தருகிறேன்' என்றான்.

"குபேரன் அவ்வாறு அவளுக்கு வரங்கொடுத்துவிட்டு விண்ணுலகத்திற்குப் போனான். அங்கே சௌதர்மேந்திரன் என்னும் தேவனைக்கண்டு, 'மண்ணுலகில் எல்லாவகையிலும் மேம்பட்டவன் உதயணன். அவனுக்கு ஒரு மகன் பிறக்கவேண்டும்' என்று கூறினான். அதற்கு அந்தத் தேவன், 'வெள்ளிமலையிலே சக்கரவர்த்தியாக இருக்கவேண்டுமென்று சோதவன் என்ற ஒரு முனிவன் தவம் புரிகிறான். அவன் உதயண

னுக்கு மகனுகப் பிறப்பான்; வித்தியாதரச் சக்கர வர்த்தியுமாவான். பிறந்து என்னிடம் வருவான்' என்று விடையளித்தான். குபேரன் திரும்பினுன்..

"பிறகு, சௌதர்மேந்திரன் சோதவனை அழைத்து, 'நீ வாசவதத்தையின் வயிற்றிலே மகனுகப் பிறப்பாயாக' என்று கட்டளையிட்டான். ஆதலால், உனக்குச் சிறந்த மகன் பிறப்பது உறுதி."

இவ்வாறு வாசவதத்தையின் மகன் பிறப்பைக் கூறிய இயக்கன் மறுபடியும், "பத்திராபதி இன்னும் உனக்கு ஏதேனும் உதவி செய்யவேண்டுமென்று விரும்பியிருக்கிருள். அவளை நினைத்தால் உன் குறையை முடிப்பாள்" என்று கூறினுன். மேலும், அவளை அழைப்பதற்குரிய மந்திரமொன்றையும் உபதேசித்து விடைபெற்று மறைந்தான். உதயணன் அம்மந்திரத்தை உருவேற்றிக்கொண்டிருந்தான்.

உதயணன் தோழர்கள் பல இடங்களிலுமிருந்து தச்சர்களை வரவழைத்து, 'வானத்தில் செல்வதற்குரிய இயந்திர விமானமொன்றைச் செய்து தரமுடியுமா?' என்று வினவினர். அவர்கள், 'எங்களாற் செய்ய முடியாது' என்று பணிவுடன் பகர்ந்தனர். இவ்வாறு பல நாட்கள் கழிந்தன.

இவற்றையெல்லாம் உணர்ந்த பத்திராபதி நாமே ஒரு தச்சவடிவுடன் சென்று இவ்வேலையை முடிப்போம் என்று முடிவுசெய்து ஒரு தச்சனுக வந்தாள். உருமண்ணுவாவை அடைந்து, தன்னுல் அந்த விமானமொன்றைச் செய்யமுடியும் என்றுள். அவன் உதயணனிடம் அழைத்துச் சென்றுன்.

உதயணன் அவள் வருகைக்கு மகிழ்ந்து இயந்திர விமானம் செய்வதற்குரிய பொருள்களையெல்லாம் அளிக்க ஏற்பாடு செய்தான். பத்திராபதி சில தினங்களில் அந்த விமானத்தைச் செய்துமுடித்தாள். உதயணனும் மற்றவர்களும் அதைப்பார்த்து மகிழ்ந்து பத்திராபதியைப் பலவாறு பாராட்டினர். வாசவதத்தை அந்த விமானத்தின் அழகைக்கண்டு வியந்தாள். அரண்மனையிலுள்ள எல்லோருக்கும் அந்த விமானம் புதிய காட்சிப் பொருளாகையால், வந்துவந்து பார்த்துச்சென்றனர்.

உருமண்ணுவா, யூகி, வயந்தகன், இடவகன் ஆகிய தோழர்களின் மனைவியரும் அப்போது கருவடைந்திருந்தனர். அவர்களுக்கும் இப்போது விமானத்திலேறிச் செல்ல ஆசையுண்டாயிற்று. உதயணன் அவர்கள் கருத்தையறிந்து பத்திராபதியை 'அவர்களும் விமானத்திலேறிச் செல்லமுடியுமா?' என்று கேட்டான். பத்திராபதி, 'முடியும்' என்றாள்.

நல்ல நாளொன்றிலே உதயணனும் வாசவதத்தையும் உதயணன் நண்பர்களும் அவர்களின் மனைவியரும் அந்த விமானத்திலேறினர். பத்திராபதியே அந்த விமானத்தை வானத்திலே செலுத்திச்சென்று இமயமலைமுதல் பொதியமலை வரையில் உள்ள பல மலைகளையும் நாடுகளையும் காடுகளையும் நகரங்களையும் ஆறுகளையுங் காண்பித்துத் திரும்பவுங் கௌசாம்பி நகரம் கொண்டுவந்து சேர்த்தாள்.

பத்திராபதியின் திறமையையும் அன்புடன் செய்த உதவியையும் உதயணன் பலவாறு புகழ்ந்து, 'உன் உதவிக்கு என்ன கைம்மாறு செய்தாலும் ஈடாகாது. எனினும், உனக்கு வேண்டுமானதைக் கேட்டால் அளிக்கிறேன்' என்று கூறித் தன்னுடைய ஆபரணங்

களையெல்லாம் கழற்றிக் கொடுக்கத் தொடங்கினன். பத்திராபதி அதைத் தடுத்து, 'அரசே! உஞ்சையிலே பிரச்சோதனனால் அளிக்கப்பட்ட பத்திராபதி நினைவி லிருக்கிறதோ?' என்றாள். உதயணன், 'ஆம் அந்தப் பிடிசெய்த பேருதவிக்குக் கைம்மாறில்லையாயினும் அது வீழ்ந்த இடத்திலே ஒரு கட்டடம் கட்டி வழிப் போக்கர் தங்கவும் உணவு பெறவும் ஏற்பாடு செய் திருக்கிறேன். அதன் எலும்பைக் கொண்டுவந்து இங்கே அடக்கம் செய்து ஒரு மண்டபம் கட்டியிருக்கிறேன்' என்றான்.

பத்திராபதி மகிழ்ந்து, 'நானே அந்தப் பத்திராபதி. நீ என்காதில் ஓதிய பஞ்சமந்திரத்தினாலேயே என் தெய்வ உருவைப்பெற்றேன். அப்போது நீ கண்ணீர் வடித்ததும் தடவிக் கொடுத்ததும் என் கண்ணெதிரே நிற்கின்றன. ஆகவே, இந்தச் சிற்றுதவியைச் செய்ய வந்தேன்' என்று கூறித் தன் தெய்வவடிவுடன் நின்றாள்.

உதயணன் பத்திராபதியைக் குறித்து மந்திரமோதி விரதமிருந்தானல்லவா? அப்போது அவள் வரவில்லையே என்று கவலையோடிருந்தான். இப்போது தச்சனைப் போல வந்து எண்ணியவற்றை முடித்துத்தந்தாளாகை யால் வியப்பும் மகிழ்ச்சியும் மதிப்பும் கொண்டான். அவன் திகைத்திருப்பதை அறிந்த அவள், 'நீயும் நானும் வேறென்று நினைக்கவேண்டாம்' என்று கூறி வான் வழிச்செல்லும் மந்திரம் ஒன்றைச் சொல்லிக்கொடுத்து விட்டு வானவழியே சென்றுவிட்டாள். உதயணன் முதலியோர் அவளைப் புகழ்ந்து வாழ்த்தினர்.

வாசவதத்தை பத்து மாதமுங் கழித்து ஓராண் குழந்தை பெற்றாள். யூகி முதலான தோழர் மனைவி யரும் ஒவ்வோராண் குழந்தையைப் பெற்றனர். அரச

குடும்பத்திலே நீண்டநாள் வரையிற் குழந்தையில்லாம லிருந்து அருமையாக ஆண் குழந்தை பிறந்தாற் கேட்க வேண்டுமா கொண்டாட்டத்தை? நாடும் நகரும் திரு விழாக் கொண்டாடின. அரண்மனையிலே இடை விடாமல் மங்கல வாத்தியங்கள் முழங்கின.

திருவிழா, திருமணம், போர் என்பவற்றிற்கு மட்டும் முரசறைந்து தெரிவிக்கும் வள்ளுவன், அலங் காரம் செய்யப்பட்ட யானையின்மேல் முரசை ஏற்றித், தானும் அமர்ந்து, முரசறைந்து, பின் வருமாறு கூறினான்:

"நாடு செழிக்க மழை பெய்க! வளம் பெருகுக! அரசர் செங்கோல் வாழ்க!

"நகரத்திலுள்ள பெரியோர்களே! நாட்டுமக்களே! நம் அரசர் பெருமானுக்குத் திருமகனார் பிறந்திருக்கிறார். ஆகையால், நீங்களெல்லோரும் வீடுகளை அலங்கரியுங் கள். தெருக்களிலே தோரணங்கள் கட்டுங்கள். தானதருமங்களைச் செய்யுங்கள். கோயில்களிலே திரு விழாக் கொண்டாடுங்கள். இசையும் நாடகமும் அங் கங்கே உள்ள மேடைகளிலே நடக்கட்டும். இன்று முதல் பன்னிரண்டு ஆண்டுகள் வரையில் வரியில்லை. சிறையிலிருப்போரெல்லாரும் விடுவிக்கப்படுவர். அரண் மனைப் பொக்கிஷத்திலிருந்து மிகுதியான பொருள்கள் யாவருக்கும் வழங்கப்படும். அரசர்பெருமான் உதயணன் வாழ்க! நாடு வாழ்க!"

இவ்வாறு முரசறைந்ததைக்கேட்டு நகரமக்கள் மகிழ்ச்சி யடைந்தார்கள்.

திருமகன் பிறந்த செய்தியை உதயணன் வாசவ தத்தையின் தந்தை பிரச்சோதனனுக்கும் பதுமையின்

தந்தை தருசகனுக்கும் மற்றைய அரசர்களுக்கும் சொல்லிவிடுத்தான். குழந்தைகள் பிறந்து பன்னிரண்டு நாட்கள் கழிந்தன. அரண்மனைச் சோதிடனுன பெருங் கணி என்பவன் வந்தான். மற்றப் பெரியோர்களும் வந்தார்கள்.

பிறந்த நாளையும் அவர்கள் அடையும் பயனையும் நோக்கிப் பெயரிடத் தொடங்கினர். உதயணன் புதல்வன் குபேரன் அருளாற் கிடைத்தவனுகையால் நரவாண தத்தன் என்று பெயரிட்டனர். நரவாணன் என்பது குபேரன் பெயர். தத்தன் என்ருல் கொடுக்கப்பட்டவன் என்று பொருள். ஆகவே, நரவாணதத்தன் என்ற பெயர் கொடுக்கப்பட்டது. யூகியின் புதல்வனுக்கு மருபூதி என்றும், உருமண்ணுவாவின் மகனுக்கு அரிசிகன் என்றும், வயந்தகன் குமாரனுக்குத் தவந்தகன் என்றும் இடவகன் மைந்தனுக்குக் கோமுகன் என்றும் பெயர் வைத்தார்கள். சிறுவர்கள் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தார்கள்.

நரவாணதத்தனும் அவன் தோழர்களும் குழவிப் பருவம் நீங்கிக் கல்விகற்கும் பருவம் அடைந்தனர். நல்ல நாளிலே கலைமகளை வழிபட்டு எழுத்துக் கற்பித்தனர். இலக்கண இலக்கியங்களிலும் அறநூல்களிலும் அரசியல் நூல்களிலும் வல்லவர்களாலும் வில், வாள் முதலிய படைக்கலப் பயிற்சியில் வல்லவர்களாலும் அவர்கள் நன்ருகக் கற்றுத் தேறினர். நரவாணதத்தன் வீரம், உடல் வலிமை, போர்முறை முதலியவற்றிலே மிக விரைவிலே சிறந்தவனுனன். மற்றக் கலைகளும் அவனைத் தேடிவந்தடைந்தன. அவனும் அவன் தோழர்களெல்லோரும் இளங்காளைகள் ஆனுர்கள்.

## 2. மதனமஞ்சிகை மணம்

அந்த நகரத்திலே கல்வியிலும் கேள்வியிலும் சிறந்தவர்களான இரண்டாயிரத்தைந்நூறு நாடகக் கணிகையர் இருந்தனர். அவர்களிற் சிறந்தவள் கலிங்கசேனை. அவளழகிலே ஈடுபட்ட தனமித்திரன் என்னும் வணிகன் அவளை மணம்புரிந்துகொண்டான். அவர்களுக்கு மதனமஞ்சிகை என்னும் அழகிய பெண் பிறந்தனள். அவள் நாடகக் கலையே ஓர் உருவம் எடுத்து வந்தவளாக இருந்தாள். 'அழகுக்கு ஓர் ஆபரணம்; கணிகையர் குல விளக்கு' என்று எல்லோரும் புகழ்ந்தார்கள்.

அவள் ஒருநாள் தன் தோழிகளோடு தன் மாளிகையில் மேல்மாடியிற் பந்து விளையாடிக்கொண்டிருந்தாள். அப்போது பந்து ஒன்று சாளரத்தின் வழியே வெளியில் வந்து விழுந்தது. அது தெருவிலே யானையின் மேலேறித் தன் தோழருடன் நகரைச் சுற்றிப் பார்த்துவரும் நரவாணதத்தனுடைய ஆடையின்மேல் விழுந்தது. அவன் அப்பந்தை எடுத்து வைத்துக்கொண்டு மாளிகையை நோக்கினான். அப்போது மதனமஞ்சிகை பந்தைப்பார்க்க ஓரத்தில் வந்து சாளரத்தின் வழியே நோக்கினாள். அவளை நரவாணதத்தன் கண்டு திகைப்படைந்தான். பிறகு, பந்துடனே ஒரு சோலையிற்போய் யானையை விட்டிறங்கித் தங்கினான். தன் தோழர்களில் ஒருவனான கோமுகனைக் கூப்பிட்டுத் தனியே அமர்ந்து அப்பந்தைக் காட்டினான். 'இப் பந்திலே இதைவைத்து ஆடியவளுடைய கைரேகை இருக்கிறது. இதைக் கொண்டு அவளைக் கண்டுபிடி' என்றான்.

கோமுகன் சித்திரக்கலையிலே சிறந்தவன். ஒருவருடைய ஒருறுப்பையாவது கைரேகையையாவது



கை ரேகையைக் கொண்டு கோமுகன் ஓர் அழகிய
பெண்ணின் வடிவத்தை வரைதல் [பக்கம் 16.]

வைத்துக்கொண்டு அவர்களுடைய முழு உருவையும் சித்திரித்துவிடுவான். ஆகையால், அவன் அப்பந்திலே சந்தனம் அப்பிய கைரேகையைக்கொண்டு ஒரு அழகிய பெண்ணின் வடிவத்தை எழுதிக்காட்டினன். நரவாண தத்தன் அதைப்பார்த்து வியப்படைந்து அவளே தன் கண்களுக்கு விருந்தளித்த பெண் என்றான். கோமுகன் சிந்தித்துப்பார்த்து மதனமஞ்சிகையே அவளெனக் கூறினன். அவளைப்பற்றிய வரலாற்றையுங் கூறினன்.

நரவாணதத்தன் கோமுகனிடம், 'என் உள்ளம் அவளை விரும்புகிறது. அவளை அடைவது எப்படி?' என்றான். கோமுகன், 'நண்பனே! அவள் நாடகக் கணிகை. அவளை அரசகுமாரனும் ஒப்பற்றவீரனும் கல்விகேள்விகளிற் சிறந்தவனுமான நீ விரும்புவது மதிப்பைக் கெடுக்கும்' என்றான். நரவாணன், 'அவளை மணம்புரிவதுதான் என் நோக்கம். அழகிலும் கல்வியிலும் உயர்ந்த அவளை மணப்பது மதிப்பைக் குறைக்காது' என்று கூறி அவளை மணக்க வழிகூற வேண்டினன்.

கோமுகன் நகைத்து, 'மதிப்புக் குறையாது என்றால் விரைவில் மணத்துக்கு வழிதேடுகிறேன்; கலங்காமல் இரு' என்று கூறினன்; மதனமஞ்சிகையின் அன்னையான கலிங்கசேனையைக் கண்டு நரவாணதத்தன் கருத்தைத் தெரிவித்தான். மிகுதியான பொருள்களையும் வழங்கினன். கலிங்கசேனை தன் மகளை அரசகுமாரன் விரும்புகிறானென்பதைக் கேட்டுப் பெருமகிழ்ச்சி அடைந்தாள். தான் வழிபடுகின்ற தெய்வத்தின் அருளோ என்று வியப்படைந்தாள்.

அப்போது, அவளுடைய சுற்றத்தார், "நரவாணதத்தன் அரசகுமாரன். அவனுக்கு இதனால் ஏதாவது

குறைபுண்டானாலும் உண்டாகலாம். ஆகையால், அரசன் கட்டளையின்றி இதற்கு உடன்படலாகாது'' என்றனர். கலிங்கசேனை அதைக்கேட்டு அஞ்சித் தான் கோமுகன் விருப்பத்தின்படி நடக்கமுடியாமைக்கு வருந்துவதாகக் கூறினாள். கோமுகன் சோர்வுடன் வந்து தன் தோழனிடம் நிகழ்ந்ததைக் கூறி, 'நீ அவளை மறப்பதே ஏற்றது' என்றான்.

நரவாணதத்தன் மனமுடைந்து போனான். அதே ஏக்கமாக வாடிக்கிடந்தான்; விளையாட்டிலும் கலை யாராய்ச்சிகளிலும் சேரவில்லை; உண்பதிலும் உடுப் பதிலுங்கூட மனத்தைச் செலுத்தவில்லை. இவ்வாறு அவன் இடிந்து போவதை யறிந்த கோமுகன் துணிந்து உதயணனிடம் கூறினான். உதயணன் முதலில் வியப் பும் திகைப்பும் அடைந்தான். எனினும், தன் மரபை விளக்கவந்த செல்வன் தெளிவடைய வேண்டுமென்று நினைத்துத் துணிவுகொண்டு, மதனமஞ்சிகையை நரவாணதத்தனுக்கு மணம் புரிந்து வைத்தான். மண மக்களிருவரும் மனம் மிக மகிழ்ந்தனர்.

இவ்வாறு இவர்கள் மகிழ்வுடன் இருக்கும்போது அந்த நகரத்திலே ஆண்டுதோறும் நடைபெறும் விழா ஒன்று நடைபெற்றது. ஆடவரும் பெண்களும் அழகாகத் தங்களை அலங்கரித்துக்கொண்டு, வீடுகளையும் தெருக் களையும் பந்தல்களாலும், தோரணங்களாலும் புனைந் தனர். பொழில்களிலும், குளக்கரைகளிலும் மக்கள் திரள்திரளாகக் காணப்பட்டனர். பலவகை வேடிக்கை களும் விளையாட்டுக்களும் நடைபெற்றன.

## 3. மதனமஞ்சிகையின் பிரிவு

அவற்றைப் பார்க்கக் கந்தருவர்களும் வருவார்கள். அந்த ஆண்டில் அவர்களிற் சிறந்தவனுகிய மானச வேகன் என்பவன் வந்தான். அவன் அந்நகரக் காட்சிகளைக் கண்டு வரும்போது மதனமஞ்சிகையைக் கண்டான். அவள் அரண்மனைப் பொழிலிலே ஒரு கட்டு மலையின்மேல் நின்றுகொண்டிருந்தாள். (கட்டுமலையென்பது அரண்மனைப் பெண்கள் வெளியிலே நடக்கும் காட்சிகளைப் பார்க்க உயரமாகக் கட்டப்படும் செயற்கைமலை. அம்மலையைக் கற்களையும் சுண்ணும்பையுங் கொண்டு கட்டுவார்கள். இடையிடையே செடிகளையும் மரங்களையும் வைத்துப் பயிராக்கியிருப்பார்கள்.) மதனமஞ்சிகை அந்தக் குன்றின்மேலிருந்து நகரில் நடக்கும் வேடிக்கைகளைப் பார்த்துக்கொண்டிருந்தாள். அவளைக்கண்ட மானசவேகன் அவள்மேல் ஆசைகொண்டான். அவளை எப்படியாவது தன் நாட்டிற்கு எடுத்துச் செல்லவேண்டுமென்று நினைத்துச் சமயம் நோக்கியிருந்தான்.

இவன் எண்ணத்தை நரவாணதத்தனும் மதன மஞ்சிகையும் அறியவில்லை. எப்படி முடியும்? அவன் வானத்திலே உலாவுகிறவன். சிறந்த சூழ்ச்சியுடையவன். மேலும், அவனைப்பற்றி அவர்களுக்குத் தெரியவுந் தெரியாது. தங்களுக்கு வரப்போகுந் துன்பத்தைச் சிறிதும் அறியாத அவர்கள் பூம்பொழிலிலே பூங் கொடிகளாலே அமைக்கப்பட்ட கொடிவீடொன்றிலே மெல்லிய மலர்களைப் பரப்பிய படுக்கையிலே அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தனர். மானசவேகன் அங்கே வந்தான். அவர்கள் தூங்குவதைக் கண்டான். நரவாண

தத்தனுக்கு நன்ருகத் தூக்கம் வரும்படி தன் மந்தி ரத்தைக் கூறினன். பிறகு, மதனமஞ்சிகையைத் தூக்கிக்கொண்டு தன் நகரத்தை அடைந்தான். அழகிற் சிறந்த ஒரு பெண்ணைக் கொண்டுவந்துவிட்டோம் என்ற கர்வம் அவன் தலைக்கேறியது.

அவன் இன்பத்தாற்குதிக்கும் மனத்துடனே தன் அரண்மனையின் ஒரு பக்கத்திலே அவளை மெல்ல விடுத் தான். சிறிது போதில், அவள் தூக்கத்தினின்றும் விழித்தாள். மானசவேகன் சிறிது விலகி மறைந்து நின்ருன். விழித்த மதனமஞ்சிகை நாற் புறத்தையும் நோக்கினள். அந்த இடம் வேறென்பதை அறிந்து நடுங்கினள். எப்படி இங்கு வந்தோம் என்று சிந்தித்தாள். சிந்தனைக்கு ஒன்றும் புலப்படவில்லை. தன் கணவனைத் தேடிப்பார்த்தாள். அவனையுங்காண முடியவில்லை. துக்கம் பீறிட்டுக்கொண்டு வந்தது. வாய் விட்டழுதாள். அவள் நின்ற இடம், தான் துயிலச் சென்ற இடத்தைவிட அழகிற் சிறந்ததாகக் காணப் பட்டாலும், அவள் கண்ணுக்கு அஃதொன்றும் தெரிய வில்லை. கணவனைக் காணவில்லையே யென்ற கவலையே மேலிட்டது.

அப்போது மானசவேகன் அவள் எதிரிலே வந்தான். அறிமுகமில்லாதவனைக் கண்டவுடன் திடுக் கிட்டாள். அழுகையை நிறுத்திக்கொண்டு பூமியைப் பார்த்தவண்ணம் நின்ருள். அவள் நிலையைக்கண்ட மானசவேகன் நகைத்து, "அழகிற் சிறந்த பெண்ணே! ஏன் இப்படிக் கலங்குகிருய்? நீ செய்த புண்ணியத் தாலேதான் இங்கு வரமுடிந்தது. மானிடர் எவரும் இங்கே வரமுடியாது. உன் அழகில் மயங்கிய நானே இங்கு எடுத்துவந்தேன். நான் இந்நகரத் தரசன்.

மானசவேகன் என்பது எனக்குப் பெயர். நான் வித்தியா தரன். இதுவும் வித்தியாதரநகர். உன்னைக் காதலியாக அடைய விரும்புகிறேன்". என்று கூறினான்.

மதனமஞ்சிகை இம் மொழிகளைக்கேட்டுத் திடுக் கிட்டாள். "ஐயா! தாங்கள் வித்தியாதரரென்றும், இது வித்தியாதர உலகமென்றும் கூறுகிறீர்கள். வித்தியா தரர்கள் சிறந்த ஒழுக்கமுடையவர்களென்றும் தெய்வப் பிறப்பினர்களென்றும் நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர்கள் இம்மாதிரி தவறுதலாக மற்றவர் மனைவி யரை விரும்பித் தூக்கிவரமாட்டார்கள். ஆகையால், மனம் இரங்கி என் கணவரிடம் கொண்டுபோய் விட்டு விடுங்கள்; என்னைச் , சோதிக்கவேண்டாம்" .என்று வேண்டினாள். அவள் கண்களிலிருந்து நீர் பெருகியது.

அதைக்கேட்ட மானசவேகன் திகைத்தான். எனி னும், அவளை எப்படியும் வழிக்குக்கொண்டுவரவேண்டு மென்று நினைத்தான். "மதன மஞ்சிகையே! வலிய வரும் செல்வத்தைக் காலால் உதைக்காதே. உன்னை உண்மையாகவே விரும்புகிறேன். எப்பொழுதும் மாறாத அழகையும் இளமையையும் உனக்குக் கொடுப்பேன். இந்த உலகத்திலே துன்பமென்பதே கிடையாது. இந்த நகரைச் சுற்றிப்பார். உன் நாட்டைவிட எவ்வளவு சிறந்த அழகுடையதென்பதை நன்றாக அறிவாய். தெய்வப் பிறப்பினரான நாங்கள் உங்களை விரும்புவது இயற்கைக்கு மாறானது. நீ செய்த புண்ணியமும் அழகுமே என்னைக் காதல்கொள்ளும்படி செய்தது." என்று கூறி வேண்டினான். வேண்டியும், அவள் சிறிதும் இணங்கவேயில்லை.

அவள், 'என் கணவரே என் தெய்வம். அவரிருக்கு மிடமே தெய்வலோகம்' என்று கூறிவிட்டாள்.

ஆகையால், மானசவேகன் வேறொரு வழியை நாடினான். அவனுக்கு ஒரு தங்கையிருந்தாள். அவள் பெயர் வேகவதி. அவள் சிறந்த கல்வியும் கேள்வியும் சூழ்ச்சியும் உடையவள். அவளைக்கொண்டு மதனமஞ்சிகையை வயப்படுத்திவிடலாம் என்று மனப்பால்குடித்தான். அவன் தன் தங்கையிடம் சென்று, 'மதனமஞ்சிகையை எப்படியாவது வயப்படுத்து' என்று கூறியனுப்பினான்.

வேகவதி மதனமஞ்சிகை யிருக்குமிடத்திற்கு வந்தாள். அவளைக்கண்டு வியப்படைந்தாள். மானிடப் பெண்களிலும் இவ்வளவு அழகுடையவள் இருக்கிறாளோ என்று திகைத்தாள். மெதுவாக அவளை அணுகி, 'நீ யாரம்மா?' என்று அன்புடன் வினவினாள். மதனமஞ்சிகை தன் வரலாற்றைக் கூறினாள். அதைக் கேட்டு இரக்கமடைந்தவள்போல், 'இங்கு வந்தது எப்படி?' என்றாள். அதற்கு, 'யாரோ ஒரு வித்தியாதர அரசன், மானசவேகன் என்பவன், என்னைத் தூக்கி வந்துவிட்டான். என்னைத் தன் காதலியாக இருக்கும்படி தொந்தரவு செய்கிறான்' என்றாள்.

வேகவதி: நீ ஏன் அதற்கு இணங்கவில்லை. அவர் மேல் உனக்குக் காதலுண்டாகவில்லையா?

மதனமஞ்சிகை: எப்படி உண்டாகும்? கற்புடைய பெண்களுக்குக் காதல் ஒருவரிடமே உண்டாகும். ஒருவரிடத்துக் காதல் கொண்டபின் மற்றவரை மனத்தாலும் நினைப்பார்களோ? மேலும், என் காதலரை விட மானசவேகன் எவ்விதத்திலும் சிறந்தவனில்லை.

வேகவதி: அப்படியா? மனிதர்கள் கந்தர்வரைவிட அழகாக இருக்கிறார்களென்பதை நீதான் கூறுகிறாய்! இதுவரையிற் கேட்டதேயில்லை.

மதனமஞ்சிகை: என் காதலரை நீ ஒருமுறை பார்த்தால் இப்படிக் கூறமாட்டாய். தெய்வத்தன்மை பொருந்திய இந்த மானசவேகன் தெய்வத்தன்மையில்லாத அவருடைய கால்தூசுக்கும் ஒப்பாகமாட்டான்.

வேகவதி: உன் காதலர் யார்?

மதனமஞ்சிகை நரவாணதத்தனைப்பற்றி விளக்கமாகக் கூறினாள். வேகவதி இதைக்கேட்டு அவனைப்பார்க்க ஆசைகொண்டாள். மதனமஞ்சிகையைத் தேற்றி, 'மானசவேகன் என் தமையன். நீ விரும்பாதபோது உன்னை ஒன்றும் செய்யமாட்டான். பயப்படாமல் என் அரண்மனையில் இரு. நீ இணங்கமாட்டாய் என்பதைத் தெளிவாக அறிந்தால் உன்னை விட்டுவிடுவான்' என்று கூறி அவளைத் தன் அரண்மனையில் அழைத்துச்சென்று இருக்கச்செய்தாள். உணவு முதலியன கொடுத்து ஆதரித்தாள். மற்றும் அவளுக்கு வேண்டிய வசதிகள் யாவும் செய்துகொடுத்தாள்.

# 4. வேகவதி மணம்

இவ்வாறு செய்து கொடுத்தபிறகு, அவளறியாமல் நரவாணதத்தனைக் காணப்புறப்பட்டாள். கௌசாம்பியை அடைந்து மதனமஞ்சிகையின் நினைவால் வருந்திக்கொண்டிருக்கும் அவனை ஒரு பொழிலிற் பார்த்தாள். பார்த்தவுடனே மதனமஞ்சிகையின் வாயாற் கேட்டதைவிடக் கண்ணால் நேரிற்காணும் அவனழகு சிறப்பாயிருப்பதைக் கண்டு, அவன்மேல் ஆசைகொண்டாள். தன் தமயனுக்கு மதனமஞ்சிகையை வசமாக்க முயன்ற அவள், மதனமஞ்சிகையின் கணவன்மேல் ஆசைகொண்டு தன் வேலையை மறந்தாள்; மதனமஞ்சிகைபோல வடிவங்கொண்டு அவன் எதிரில் நின்றாள். அவளைக்கண்ட நரவாணதத்தன் மகிழ்ந்து அவளோடு கூடியிருந்தான்.

எனினும், சில நாளிற் சந்தேகமடைந்து, 'நீயார்?' என்று கேட்டான். அவள் தான் இன்னளென்று விளக்கமாகக் கூறித் தன் உண்மை வடிவுடன் நின்றாள். வேகவதியும் அழகுடையவளாகையால், அவளைக் கண்டவுடன் மதனமஞ்சிகையை மறந்து அவள்மேல் ஆசைகொண்டான். ஆகவே, அவளோடு மகிழ்ந்து காலங் கழித்துவந்தான்.

## 5. நரவாணதத்தன் பாட்டனைக் காணுதல்

இவர்கள் இவ்வாறிருக்கும்போது மானசவேகன் தன் தங்கையைக் காணாமல் தேடத் தொடங்கினான். மதனமஞ்சிகையைத் தன் வசப்படுத்தச்சென்ற அவனைத் தேடித்திரிய நேர்ந்ததைக் குறித்து வருந்தினான். மதனமஞ்சிகையைப் பலமுறை வேண்டியும் அவள் இணங்கவில்லை. ஆகவே, அவன் மனம் கொதிப்படைந்தது. அவனுக்கு ஓரிடத்திலும் இருக்க முடியவில்லை.

அலைந்துகொண்டிருந்த மானசவேகன், கௌசாம்பியிலே தன் தங்கையும் நரவாணதத்தனும் ஒரு படுக்கையிலே படுத்திருப்பதைக் கண்டான். காணக்காண அவன் வெறிகொண்டவன்போலானான். 'ஒரு மானிடப் பெண் வித்தியாதரனை விரும்பமாட்டேனென்கிறாள்; ஆனால், வித்தியாதரப் பெண் மானிடனை விரும்புகிறாள்!' என்னும் இந்த நிலை அவனுக்குப் பொறுக்க முடியாத சினத்தை உண்டாக்கியது. அவன் அவர்களிருவரையும் அப்படியே தூக்கிக்கொண்டு வானவழியே கிளம்பினான். வானத்திற் செல்லும்போது இடைவழியிலே நரவாணதத்தனைத் தள்ளிவிட்டுத் தன் நாடு நோக்கிச் சென்றான். நரவாணதத்தன் உடனே மடியவேண்டுமென்பது அவன் கருத்து.

ஆனால், அவனொன்று நினைக்க வேகவதியான அவன் தங்கை ஒன்றை நினைத்தாள். தன் மந்திரவலியால் நரவாணதத்தனுக்கு எவ்வித இடையூறும் உண்டாகாதபடி செய்தாள். ஆகையாற், கீழே விழுந்த நரவாணதத்தன் எவ்வித இடையூறுமின்றியெழுந்தான். தன்னை மானசவேகன் தூக்கிவந்ததும் தள்ளிவிட்டதும்

தெரியாதாகையால் கீழேவிழுந்து எழுந்தது படுக்கையி லிருந்தெழுந்ததைப்போல் இருந்தது.

எனவே, விழித்தெழுந்தவனைப்போலத் தன் பக் கத்திலுறங்கிய வேகவதியைக் காணமல் வியப் படைந்தான். பிறகு, நாற்புறமும் பார்த்தபோது தான் உறங்கிய இடமன்றென்பதையும் கட்டிலில்லாததையும் அறிந்து திகைத்தான். வேகவதி வித்தியாதர மங்கை யாகையால் தன் மந்திரவலியால் ஏதாவது விளையாட்டுச் செய்கிருளோ என்றெண்ணி, நாற்புறமும் சென்று பார்த்தான். அவளையுங் காணவில்லை; அவள் விளையாட் டாகவும் தெரியவில்லை.

நரவாணதத்தன் சிந்தனையில் மூழ்கினன். இரண்டு பெண்களை மணந்தான்; இருவரையும் இழந்தான். மேலும், தன் இருப்பிடத்தையும்விட்டுத் திக்குத் தெரி யாத இடத்தில் அகப்பட்டான். இவ்வாறு கலங்கிய மனத்துடன் திரிந்துகொண்டிருக்கும்போது ஒரு முனிவ ரின் தவப்பள்ளியைக் கண்டான். அவரைக் கண்டு வணங்கினல் மனத்தெளிவு உண்டாகுமென்று நினைத்து அவர்பால் சென்று வணங்கினன்.

இவன் சென்றபோது அம்முனிவர் ஒரு பீடத்தின் மேல் அமர்ந்திருந்தார். இவனைக் கண்டு வாழ்த்தி அமரச் சொன்னர். பிறகு, முகத்தை உற்றுநோக்கியபோது அவருள்ளத்திலே மகிழ்ச்சி உண்டாயிற்று. அவனைப் பார்த்து, 'அப்பா! நீ உதயணன் மகனே?' என்ருர். அவன் வியப்படைந்து, 'ஆம்' என்ருன். பிறகு, 'நான் உதயணன் தந்தை: இங்கே தவம் புரிகிறேன். உன் முகத் தோற்றத்தாலறிந்தேன்' என்ருர். அவன், 'நான் முன் செய்த புண்ணியத்தாலே தங்களைக் காணப்பெற்றேன்'

என்று மறுபடியும் வணங்கினான்; தன் நிலைமையையும் தெளிவாக எடுத்துச் சொன்னான். அவர் அவனை அன்புடன் தழுவிக்கொண்டு பழவகைகளைக் கொடுத்து உண்ணச் சொன்னார்.

நரவாணதத்தன் தன் பாட்டனாரிடம் பணிவிடை செய்துகொண்டு சிலநாள் தங்கியிருந்தான். ஒருநாள் அவரை வணங்கி, "ஐயனே! என் இளம்பருவத்திலே நான் வித்தியாதரசக்கரவர்த்தியாவேனென்று பெரியோர் சொல்லக் கேட்டிருக்கிறேன். அவ்வாறு ஆக முடியுமா? முடியுமானால் அதற்குரிய வழியைக் கூறவேண்டுகிறேன்" என்றான்.

சதானிகரென்னும் அம்முனிவர், 'குழந்தாய்! நீ அதற்குரியவன்தான். உன் தந்தைக்கு வானவழியிலே செல்லும் மந்திரம் தெரியும்: அவனிடம் அதைக் கற்று வித்தியாதர நாடு செல்க. அங்கே உனக்கு யாவும் எளிதிலே கிடைக்கும்' என்றார். நரவாணதத்தன் மகிழ்ந்து அவரை வணங்கிக் கௌசாம்பியை அடைந்தான்.

அங்கே உதயணனும் வாசவதத்தையும் மற்றுமுள்ளோரும் இவனைக் காணாமல் திகைத்துத் தேடிக்கொண்டிருந்தனர். இவனைக் கண்டவுடன் இழந்த கண்ணைப் பெற்றவர்போ லின்பமடைந்தனர். நரவாணதத்தன் தந்தையையும் தாயையும் வணங்கித் தான் அடைந்த இடையூறுகளையும் பாட்டனாரைக் கண்டதையும் அவர் கூறியதையும் விளக்கமாகக் கூறினான். பிறகு, மந்திரத்தைக் கூறும்படி கேட்டான். உதயணன் மகிழ்ந்து வானவழிச் செல்லும் மந்திரத்தைக் கற்பித்து, வித்தியாதரசக்கரவர்த்தியாகுக' என்றும் வாழ்த்தினான்.

## 6. நரவாணதத்தன் வித்தியாதர சக்கரவர்த்தி யாதல்

நரவாணதத்தன் தந்தையையும் தாயையும் வணங்கிப் புறப்பட்டான். முன்பு பத்திராபதியாற் கொடுக்கப்பட்ட விமானமும் இருந்ததாகையால், அதிலேறி, மந்திரவலியால் வித்தியாதர உலகத்திலே விசயார்த்தமென்னும் மலையின் தென்பாகத்திலுள்ள சீதரம் என்னும் நகரத்தின் கோட்டைவாயிலை அடைந்தான்.

கந்தர்வபுரம் என்றொரு நகரம். அதன் அரசன் நீலவேகன். அவன் மனைவி நாகதத்தை. இருவருக்கும் அநங்க விலாசனி என்றொரு பெண் பிறந்தாள். அவள் ஒருநாள் தூங்கும்போது ஒரு சிங்கக்குட்டி பூமியிலிருந்து வந்து அவளுக்கு மாலை சூட்டியதாகக் கனவுகண்டாள். அதைத் தந்தையிடம் அறிவித்தாள். அவன் சுமத்திரனென்னும் முனிவரைக்கண்டு அதன் பயனைக்கேட்டான். அவர், 'பூலோகத்திலிருந்து வீரமும் பலமும் பொருந்திய ஓரிளைஞன் வந்து உன் மகளை மணப்பான். பிறகு, அவன் இந்த வித்தியாதர உலகுக்கே சக்கரவர்த்தியுமாவான்' என்று விளக்கிக் கூறினர். நீலவேகன் அன்று முதல் அத்தகைய வீரன் எப்போது வருவானென்று காத்துக்கொண்டிருந்தான்.

இந்த நிலைமையிலேதான் நரவாணதத்தன் சீதரமென்னும் நகரையடைந்தான். அவனை ஒரு கந்தருவன் வந்து வணங்கி, இவ்வரலாற்றைக்கூறிக் கந்தர்வபுரத்திற்கு அழைத்துச் சென்றான். அங்கே நீலவேகன் நரவாணதத்தனை எதிர்கொண்டழைத்துச் சென்று அவன் வரலாற்றைக்கேட்டு மகிழ்ந்து உண்டியும் உடையும் அளித்துத் தனியே ஓரரண்மனையளித்துக் களிப்புடன்

இருத்தற்குரிய பொருளும், ஆட்களும் போதுமான அளவு கொடுத்தான்.

பிறகு, நல்ல நாளிலே நகரையலங்கரித்துத் தன் மகள் அநங்கவிலாசனியை மணம்புரிந்து கொடுத்தான். நரவாணதத்தனும் அநங்கவிலாசனியும் உயிரொன்றும் உடலிரண்டுமாக அன்புடன் வாழ்ந்துவந்தனர். இவ்வா றிருக்கும் நாளில் பழம்பிறப்பிற் செய்த புண்ணியத் தின் பலனாலே இந்திரன் கட்டளையின்படி தேவர்கள் நவநிதிகளையும் கொண்டுவந்து அளித்தனர். நாளுக்கு நாள் அவன் வீரமும் வலிமையும் உயர் குணங்களும் யாவருக்கும் வெளியாயின. வித்தியாதர உலகத்திலுள்ள பல நாட்டரசர்களும்வந்து வணங்கி அவனுக்குத் திறை கொடுத்துப் பணிசெய்வாராயினர். அவனும் பல இடங் களுக்குச்சென்று பல அரசர்களையும் கண்டு அவர்க ளோடு அளவளாவி மகிழ்ந்தான்.

இவ்வாறிருக்கும்போது தன்னை வஞ்சித்த மானச வேகனைக் கண்டுபிடித்துத் தண்டிக்க வேண்டுமென்று நினைத்தான். அவ்வளவிலே மானசவேகன் இவன் செய்திகளையறிந்து அஞ்சியவனாய், மதனமஞ்சிகையைக் கொண்டுவந்து அவனிடம் ஒப்பித்தான். தன் தங்கை வேகவதியையும் மணம்புரிந்து கொடுத்தான். நரவாண தத்தன் மகிழ்ந்து மானசவேகனை மன்னித்தனுப்பினான்.

பிறகு, சக்கரவர்த்தியென்று எல்லா வித்தியாதர அரசர்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டு முடிசூட்டிக் கொண்டான். வித்தியாதரலோகத் தரசரெல்லோரும் இவனைப்போன்ற சக்கரவர்த்திகளில்லையென்று கொண் டாடி வணங்கினர். நரவாணதத்தன் இவ்வாறு மானிட னாகப் பிறந்து வித்தியாதர சக்கரவர்த்தியாகி மதன

மஞ்சிகை, வேகவதி, அநங்கவிலாசனி என்ற மூன்று மனைவியரோடும் இனிமையாக வாழ்ந்துவந்தான். அடிக்கடி தன் பெற்றோரைப் பார்க்கக் கௌசாம்பியை அடைந்து உதயணனையும் வாசவதத்தையையும் வணங்கிச் செல்வான். அவர்கள் தங்கள் மகனுடைய பெருமையைக் கேட்டுக்கேட்டுப் பெரிதும் மகிழ்வார்கள்.

## நீதியும் பயிற்சிகளும்

இக்கதையால் உணரும் நீதி :—

பத்திராபதி யானையாக இருந்து இறக்கும்போது உதயணன் பஞ்சமந்திரத்தைக் கூறிப் பழம்பிறப்பான தெய்வப்பிறப்பை அடையச்செய்தான். அந்த நன்றியை மறவாமல் அவள் உதயணனுக்கு வித்தியாதர சக்கரவர்த்தி மகனாகப் பிறக்க வழிசெய்தாள். வானத்திலே உதயணன் முதலானோர் செல்ல இயந்திர விமானத்தைச் செய்து கொடுத்துத் தானே சாரதியாக இருந்து எல்லா இடங்களையும் வானவழியேசென்று பார்க்கக் காட்டினாள். ஆகவே, 'நன்மை செய்தோர் நன்மை அடைவர்' என்ற நீதி தெரிகிறது.

### தேர்வுப் பயிற்சிகள் :—

கீழ்க்கண்டவற்றை விளக்கி ஒவ்வொரு பக்கம் எழுது :—

1. உதயணன் பத்திராபதிக்குச் செய்த உதவி.
2. பத்திராபதியின் நன்றி மறவாமை.
3. நரவாணதத்தன் பிறப்பு.
4. மதனமஞ்சிகை மணம்.
5. மானசவேகன் சூழ்ச்சி.
6. மதனமஞ்சிகையின் மனவுறுதி.
7. வேகவதி மணம்.
8. நரவாணதத்தன் வித்தியாதர சக்கரவர்த்தியானது.
9. இயந்திர விமானம்.
10. அனக்கவிலாசனி மணம்.



திவிட்டன் சிங்கத்தின் வாயைக் கிழித்துக் கொல்லுதல்

[பக்கம் 42.]

# திவிட்டன்

## 1. பிறப்பும் திருமண உறுதியும்

சுரமை யென்றொரு நாடு. அதன் தலைநகர் போதனமா நகர். அந்நாட்டரசன் பயாபதி. அவன் பட்டத்தரசி சசிதேவி. இருவருக்கும் அருகக்கடவுளின் அருளால் விசயன் என்றும், திவிட்டன் என்றும் இரண்டு மக்கள் பிறந்தனர். விசயன் வெள்ளைநிறமுடையவன். பலராமனைப்போல இருந்தான். அவன் போர்க்கருவி கலப்பை. இளையவனாகிய திவிட்டன் கண்ணனைப்போலக் கரு நிறம் உடையவன். இவர்கள் தேவர்களின் அமிச மென்று கூறப்பட்டார்கள். செல்வத்திற் சிறந்த செல்வம் அறிவுடைய பிள்ளைகளைப் பெறுதல். விசய திவிட்டர்கள் அவ்வாறு சிறந்த செல்வமாக இருந்தார்கள். அரசகுமாரர்கள் அறியவேண்டியவற்றை யெல்லாம் நல்ல ஆசிரியரிடம்கற்றுத்தேர்ந்து அறிந்தனர். பயாபதி தன் பிள்ளைகளின் சிறந்தநிலையைப் பார்த்துப் பெரு மகிழ்வுகொண்டான்.

பயாபதியின் கனவு:

ஒருநாள் பயாபதி தூங்கும்போது கனவொன்று கண்டான். அக்கனவு: வானத்திலிருந்து யானை யொன்று வந்தது. அதன் துதிக்கையில் வெண்தாமரை மலர்மாலை யொன்றிருந்தது. அம்மாலையை அது இளை யவனாகிய திவிட்டன் கழுத்தில் அணிந்து திரும்பவும் வானத்திற்குச் சென்றுவிட்டது.

சோதிடன் கூறியது:

இக்கனவின் பலனை அறிய அரசன் தன் மந்திரிகளை வரவழைத்துச் சபையில் அமர்ந்தான். அப்போது

அங்கதன் என்னும் சோதிடன் ஒருவன் வாயிலில் வந்திருப்பதாகக் காவலன் அறிவித்தான். அரசன் அவனை வரவழைத்து இருக்கையில் இருக்கக் கூறினான். அவன் அரசனை வணங்கி, அரசன் கண்ட கனவைக்கூறி, 'வித்தியாதர அரசன் ஒருவன் தன் மகளை இளையவனுக்கு மணஞ்செய்து கொடுப்பான்' என்று அதன் பயனையுங் கூறினான். மேலும், 'இன்னும் ஏழுநாள் கழித்து வித்தியாதர வேந்தனிடமிருந்து தூதன் ஒருவன் வருவான்: புட்பமாகாண்டம் என்னும் சோலையில் தங்குவான்' என்றும் கூறினான். அரசன் அதைக்கேட்டு மகிழ்ந்து சோதிடனுக்கு வேண்டிய பரிசுகள் கொடுத்து அனுப்பினான். மந்திரிகளின் கருத்துப்படி அந்த நந்தவனத்திலே துருமகாந்தன் என்பவனைக் காவலாக வைத்தான்.

சுயம்பிரபை:

'வித்தியாதர' உலகம் என்பது இமயமலையிலே உள்ள வெள்ளிமயமான ஒரு பாகம். அதைச் சைவர்கள் கைலாயமலை என்பார்கள். சமணர்கள் வித்தியாதர உலகம் என்பார்கள். அந்த உலகத்திலே தெற்குப் பக்கத்தில் இரதநூபுரச் சக்கரவாளம் என்னும் பெயருடைய பொன்னகரம் ஒன்றிருந்தது. அதன் அரசன் சுவலனசடி என்னும் பெயருடையவன். அவனுக்கு வாயுவேகை என்னும் பட்டத்தரசியிருந்தாள். இருவருக்கும் சுயம்பிரபை என்னும் பெண்ணரசி பிறந்தாள். இவளுக்குமுன் அருக்ககீர்த்தி யென்னும் பிள்ளையும் பிறந்திருந்தான்.

சுயம்பிரபை அழகிற் சிறந்தவள். நல்ல குணமுடையவள். அறிவு மிகுந்தவள். வித்தியாதர உல

கிலே அவளைவிடச் சிறந்த பெண்மணிகளே இல்லை. இவளழகைக்கேட்ட வித்தியாதர சக்கரவர்த்தியான அச்சுவக்கிரிவன் என்பவன் வயது முதிர்ந்தவனானாலும் மணம்புரிந்துகொள்ள ஆசைப்பட்டான். மற்றும் உள்ள வித்தியாதர அரசகுமாரர்களெல்லோரும் எப்படியாவது மணம்புரிந்துகொள்ள ஆசைப்பட்டிருந்தார்கள்.

ஒருநாள் சுவலனசடி தன் மந்திரிகளைக் கூப்பிட்டுத் தன் மகளுக்கேற்ற மணவாளன் யாரென்று வினவினான். அவர்களெல்லோரும் தங்கள் தங்கள் மனம்போனபடி ஒவ்வொருவனைக் கூறினார்கள். ஆனால், ஒவ்வொருவரும் அச்சுவக்கிரிவனுக்குக் கொடுக்காவிட்டாற் பகைநேரும் என்பதைக் கூறத் தவறவில்லை. ஆகவே, சுவலனசடி யின் மனம் குழம்பியது.

கடைசியாக அரசன் சதவிந்து என்னும் அரண்மனைச் சோதிடனை வரவழைத்துக் கேட்டான். அவன் நன்றாக ஆராய்ந்து 'பூவுலகத்திலுள்ள பயாபதி யென்னும் அரசன் மகனான திவிட்டன் என்பவனே சுயம்பிரபையை மணப்பவன்' என்று கூறினான். மேலும், 'திவிட்டனே அச்சுவக்கிரிவனை வென்று உலகைக் காப்பான் அதற்கடையாளமாக ஒரு மாதத்திற்குள் திவிட்டன் ஒரு சிங்கத்தின் வாயைப் பிளப்பான்' என்றும் கூறினான். அரசன் மகிழ்ந்து அவனுக்கு அளவற்ற செல்வத்தைப் பரிசாக அளித்தான் பிறகு, தன் மனைவியிடம் சோதிடன் கூறியதைக் கூறி மகிழ்வித்தான்.

மறுநாள் அரசன் மந்திரிகளைக் கூட்டி ஆலோசனை செய்து மரிசி என்பவனை மணவிஷயமாகப் பேசிவரத் தூதனாகப் பயாபதி மன்னனிடம் அனுப்பினான்.

மரீசி வானவழியே சென்று போதனமாநகரை அடைந்து புட்பமாகாண்ட மென்னும் பொழிலிலே இறங்கினுன். அப்பொழிலின் அழகு அவன் கண்களைக் கவர்ந்தது. அதைச் சுற்றிப்பார்த்து வரும்போது துருமகாந்தன் மரீசியைக் கண்டான். மரீசியின் தோற்றம் மனிதத்தோற்றமாக இல்லாததால் வித்தியாதரனுகவே யிருக்க வேண்டுமென்று முடிவுசெய்து, பணிவுடன் வரவேற்று, ஒரு மேடைமேல் வீற்றிருக்கச்செய்தான்; அரசனுக்குச் சொல்லியனுப்பினுன்.

பயாபதி மன்னன் தன் மக்களிருவரையும் அனுப்பி அழைத்துவரக் கூறினுன். விசயனும் திவிட்டனும் யானை முதலிய நால்வகைப் படையுடனும் சென்று மரீசியை யானைமீது ஏற்றி நகர்வலமாக அழைத்து வந்து அரசசபையை அடைந்தனர். அரசன் தூதுவனை அன்புடன்வரவேற்றுத் தகுதியான இருக்கையிலே வீற்றிருக்கச் செய்தான். மரீசி அரசனை வணங்கிச் சுவலனசடி கொடுத்த திருமுகத்தைக் கொடுத்தான்.

பயாபதி அதனை ஏற்றுப் படித்துப்பார்த்தான். அத்திருமுகத்தில், திவிட்டனுக்குத் தன்மகள் சுயம்பிரபையைக் கொடுப்பதாக வித்தியாதரவேந்தன் எழுதியிருப்பதைக்கண்டு பெருமகிழ்ச்சி யடைந்தனன். மனிதரைவிடப் பலவகையினும் உயர்ந்த வித்தியாதரர்களின் சம்பந்தம் தனக்குக் கிடைப்பதை நினைத்து நினைத்துப் பூரித்தான். மணவினையை மகிழ்வுடன் ஏற்பதாகக் கூறி விடை கொடுத்தனுப்பினுன்.

மரீசி இரதநூபுரஞ் சென்று சுவலனசடி மன்னனிடம் செய்தியைக் கூறினுன். அவனும் கவலைதீர்ந்து திருமண முயற்சியிலே ஈடுபட்டான்.

## 2. சிங்கத்தின் வாயைப் பிளந்தது

அச்சுவகண்டன் சிற்றம் :

வித்தியாதர உலகுக்குச் சேடி யென்றும் ஒரு பெய ருண்டு. அதன் வடபகுதியிலேதான் அச்சுவகண்டன் ஆட்சிபுரிந்துவந்தான். அவன் தலைநகர் இரத்தின பல்லவம். அவனுக்கு நீலரதன், நீலகண்டன், வச்சிர கண்டன், சுகண்டன் என நான்கு தம்பியரிருந்தனர். அவன் மக்கள் பலர். அவர்களிற் சிறந்தவன் மூத்த மகனான இரத்தினகண்டன். இவர்கள் யாவரும் தோள் வலியும் சூழ்ச்சி வலியும் மிக்கவர்கள். ஆகையால், அச்சுவகண்டன் ஆட்சிக்கு யாவரும் தலைவணங்கினர். அச்சுவகண்டனிடம் சிறந்த சக்கரமொன்றும் இருந்தது. அது திருமாலின் ஆழிபோலப் பிறபடைகளால் வெல்ல முடியாதது; ஆகவே, அவன் இறுமாந்து மற்றவரை மதியாமல் இருந்துவந்தான். அவனுக்குத் தன்னை வெல்ல எவராலும் முடியாதென்ற எண்ணம் எப்போது மிருந்தது.

ஒருநாள் சதவிந்து என்னும் அரண்மனைப்புரோ கிதன் அச்சுவகண்டன் சபைக்குச் சென்றான். அரசன் அவனை வரவேற்று இன்மொழிகள் கூறி வீற்றிருக்கச் செய்தான். அவன் தனக்குக் குறிப்பிட்ட இருக்கை யிலே அமர்ந்து, அரசனை வாழ்த்தி, "அரசர்க்கரசே! பூலோகத்திலே போதனமாநகரமென ஒன்று இருக் கிறது. அதனை ஆளும் பயாபதி மன்னனுக்கு விசயன் திவிட்டன் என இரு மக்கள் உளர். அவர்கள் அழகிலே காமனையும் அறிவிலே வியாழனையும் ஆற்றலிலே எமனை யும் வெல்லும் தன்மையினர். அவர்களில் இளையவனான திவிட்டனே புகழ்பெற்ற வீரன். அவனால் நமக்குக்

கேடுண்டாயினும் ஆகும். ஆகையால், எச்சரிக்கையாக இருத்தல் நலம்'' என்று கூறினன்.

இம் மொழிகளைக்கேட்ட அச்சுவகண்டன் ஏளன மாகநகைத்து, ''வானம் அளாவிய இமயமலையை விசிறியி லிருந்தெழும் காற்று அசைக்குமோ? கருடன்முன் ஈயானது எதிர்த்துநிற்குமோ? பாம்பின் மூச்சுக்காற்றுக் காவது எலி ஆற்றுமோ? என்னையும் என் உறவினரை யும் என்ஆழியையும் எதிர்த்துநிற்போர் யாவர்? எனினும், உங்கள் சொல்லுக்கு மதிப்புக் கொடுக்கி றேன். அமைச்சர்களோடு ஆராய்ந்து செய்வன செய்க'' என்று கூறினன்.

சதவிந்து அமைச்சர்களுடன் ஆராய்ந்தான். ஆராய்ச்சி முடிவில், 'நெருப்புப்பொறி எள்ளளவாக இருந்தாலும் இடங்கிடைத்தால் உலகையும் எரித்து விடும். அதுபோலப் பகை சிறிதாக இருந்தாலும் இடம் பொருள் ஏவல் எல்லாம் நன்றுகக் கிடைத்தால் அது வலிய பகையையும் அழித்துவிடும். ஆகையால், அப் பகையை முளையிலேயே கிள்ளி எறியவேண்டும்' என்று ஒரு முகமாக முடிவுசெய்தனர்.

பிறகு, தாங்களே அரசனுக்குக் கூறுமல் எதிரியின் வலிமையை ஆராயத்துணிந்து சில தூதர்களைப் பயா பதி மன்னனிடம் அச்சுவகண்டனுக்குக் கப்பம் வாங்கி வரும்படி அனுப்பினர். தூதர்கள் அவ்வாறே பயாபதி யின் சபையை அடைந்து வணங்கிக் கப்பம் தரும்படி கேட்டனர். பயாபதிமன்னன் அச்சுவகண்டனுக்குக் கப்பம்தரும் நிலையிலுள்ளவன். விசய திவிட்டர் பிறந்த நாளிலிருந்து கட்டவில்லை. அவர்கள் பிறந்த பெருமையி ஞலும் அவர்களுக்குக் கிடைத்த புகழினுலும் மறந்

திருந்தான்: கட்டுவதில்லை யென்றிருந்தானென்றுங் கூறலாம். இப்போது தூதர்கள் வந்தவுடன் கப்பங் கட்டாவிட்டாற் போர் மூளுமே என்ற நினைவால் தன் மக்களுக்குத் தெரியாமலே கப்பப்பொருளைக் கொடுத்து அனுப்பிவிட்டான்.

அவர்கள் புறப்படும்போது திவிட்டன் அங்கே வந்து சேர்ந்தான். வேற்றரசர்களின் தூதுவர்கள் ஏதோ பொருளுடன் திருப்புகிறார்களென்பதைக் குறிப்பாலறிந்து என்னவென்று வினவினான். அங்கிருந்தவர்கள் உண்மையைக் கூறினர். மாற்றரசனுக்குத் திறையென்றறிந்ததும் அவன் உள்ளம் கொதித்தது. அடிபட்ட நாகம்போலத் துடிதுடித்தான். மற்றொருவனுக்குத் திறைகொடுத்து வாழும் அரசவாழ்க்கை ஒரு வாழ்க்கையா எனக் குமுறினான். உடனே, தூதர்களைப் பார்த்து, 'நீங்கள் அச்சுவகண்டனிடஞ் சென்று திறை கொடுக்க மறுத்ததாகக் கூறுங்கள். திறைகொடா விட்டால் என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்வானோ அதை எடுத்துக்கொள்ளச் சொல்லுங்கள்' என்று சினத்துடன்கூறிப் பொருள்களை எடுத்துப் பொக்கிஷத்திலே சேர்க்கத் தன் ஆட்களுக்கு ஆணையிட்டான். பயாபதி மன்னன் இதைக் கேட்டுப் பயந்தான்.

சிங்கத்தின் வாயைப் பிளந்தது:

வெறுங்கையோடு திரும்பிய அச்சுவகண்டன் தூதர்கள் அவன் மந்திரிகளில் முதல்வனான அரிமஞ்சு என்பவனிடம் கூறினார்கள். அவன் அரசனுக்குத் தெரியாமலே இப்பகைமையை ஒழிக்கலாமென்று உறுதிசெய்து கொண்டான். 'திவிட்டன் இளையவன்; நல்லது கெட்டது தெரியாமல் வாய்க்கு வந்தவாறு கூறி

விட்டான். அவனை ஏமாற்றி மலைக்குகையிலுள்ள சிங்கத்திற்கு இரையாக்கவேண்டும்' என்று ஒரு வகையில் முடிவு செய்தான். அரிகேது என்னும் வித்தியாதரனை அதற்குவேண்டிய முயற்சி செய்யும்வண்ணம் அனுப்பினான்.

அரிகேது ஒரு சிங்கம்போல வடிவெடுத்துச் சுரமை நாட்டை யடைந்தான். பெருங்குரலெடுத்துக் கர்ச்சனை செய்தான். அந்த மாயச்சிங்கத்தின் தோற்றத்தைக் கண்ட யாவரும் நடுங்கி அலறியோடினர். அரிமஞ்சு மறுபடியும் அந்தத் தூதர்களை அழைத்துத் திவிட்டனிடம் இதைக் கூறுமாறு அனுப்பினான். தூதர்கள் திவிட்டனைக் கண்டு, 'தாங்கள் கூறியதை எங்கள் அரசனிடம் கூறினோம். அவர் நகைத்துத்தங்கள் வலிமையைப் பரிசோதிக்க ஒரு சிங்கத்தை விடுத்திருக்கிறார். அது சுரமை நாட்டை அழித்து வருகிறது' என்று இயம்பினர்.

அம்மொழியைக்கேட்ட திவிட்டன் நகைத்து அங்குள்ளாரை நோக்கிச், 'சிங்கம் வந்திருப்பது உண்மையா?' என்றான். அவர்கள் ஆம் என்றனர். திவிட்டன் வித்தியாதரத் தூதர்களைப் பார்த்துத், 'தூதர்களே! நான் என் இரண்டு கைகளையுமே போர்க்கருவியாகக் கொண்டு போர் செய்து அதனைக் கொல்வேன். அதன் வாயைப்பிளப்பேன். இன்றேல், என்னை ஒன்றும் முடியாத சிறுவனென்று இகழுங்கள்' என்று சபதங் கூறினான். அவர்களும் தம் நாடு சென்று அரிமஞ்சுவினிடம் விளம்பினர்.

சபதங்கூறிய திவிட்டன் தன் தமயனான விசயன் பின்தொடர அந்த மாயச்சிங்கம் வசிக்கும் மலைச்சாரலை

அடைந்தான். அது அவர்களைக்கண்டதும் ஆரவாரஞ் செய்துநின்றது. திவிட்டன் அதற்கெதிராக இடி போலக் குமுறினுன். அதைக்கேட்டு அஞ்சிய அம்மாயச் சிங்கம் மலைக்குகையொன்றிலே நுழைந்து மறைந்தது. திவிட்டனும் அதன் பின்னே நுழைந்தான். அப் போது அங்கே துயின்று கொண்டிருந்த பெரிய சிங்க மொன்று எழுந்து பிடரிமயிரைச் சிலிர்த்துக்கொண்டு ஆங்காரத்துடன் எழுந்து திவிட்டன்மேற் பாயவந்தது. அதன் தோற்றத்திற்கும் சினத்துக்கும் அஞ்சாமல் அவனும் அதன்மேற் பாய்ந்து பிடரிமயிரைப்பற்றி ஏறி அமர்ந்து வாயைப்பற்றிக் கிழித்து எறிந்தான்

விசயன் தன் தம்பியின் ஆற்றலைக்கண்டு வியந்து தழுவிக்கொண்டான். பயாபதி மன்னனும் திவிட்ட னுற்றலைக் கேட்டு மனமகிழ்ந்தான். நாடு முழுதும் நன்மையடைந்திடுவோமெனக் களித்தது.

வானத்தில் தோன்றும் இளம்பிறையையொத்த பற்களையும், பெரும் வலிமையினையும் உடைய சிங் கத்தை, திவிட்டநம்பி, அதன் வாயைப் பிடித்துக் கிழித் தெறிந்து கொன்ற, வியப்பான செய்தியை, அவன் நாட்டுமக்கள் தெரிந்து மிக்க மகிழ்ச்சியடைந்தார்கள். ‘வாழ்க எங்கள் இளங்கோ! அவன் வெற்றி செழிக்க! நலம் பல ஓங்குக!’ என வாழ்த்தி வணக்கஞ் செலுத்தி ஞர்கள். அம் மகிழ்ச்சி அந்நாட்டு மக்களிடையே பெரி தும் பரந்து இன்பத்தை ஊட்டிக்கொண்டிருந்தது.

# 3. சுயம்பிரபை திருமணம்

திவிட்டன் சிங்கத்தைப் பிளந்த செய்தியைச் சுவல
னசடி தூதர்கள் மூலம் அறிந்து முன் சோதிடன்
கூறியது நடந்தேறியதென்று மகிழ்வடைந்தான். இனி
அஞ்சாமற் சுயம்பிரபையை மணஞ்செய்து கொடுக்கலா
மென்று நினைத்தான். அத்திருமணத்தைத் தானே
நேரில் சென்று நடத்த முடிவுசெய்து தான்போய் வரு
மளவும் இரதநூபுரத்தைக் காக்கத் தன் நண்பர்களாகிய
எட்டு அரசர்களைக் கேட்டுக்கொண்டான். அவர்களும்
ஒப்பினர்.

பிறகு, நல்ல நாளில் தன் மகனாகிய அருக்ககீர்த்தி
யுடனும் உறவினருடனும் சுயம்பிரபையை அழைத்துக்
கொண்டு போதனமாநகரம் நோக்கிச்சென்றனன். சுயம்
பிரபை தன் தோழியருடனும் நற்றாயுடனும் ஒரு
விமானத்திலமர்ந்து வானவழியே வரும்போது கீழே
பூவுலகக் காட்சிகளைக் கண்டு களித்தும், விளையாடிக்
கொண்டும், இனிமையாகப் பேசிக்கொண்டும் சென்றாள்.
இவ்வாறு போதனமாநகரடைந்து நிருநிலையகம் என்னும்
பொழிலையடைந்தனர். அங்கே யாவரும் தங்கியிருக்க
அழகிய இருக்கைகளைச் சமைத்தனன் பயாபதி. அவர்
கள் தங்களுக்கேற்ற இடங்களிற்றங்கினர். மரீசியைப்
பிறகு பயாபதியினிடம் செலுத்தினர். மரீசி பயாபதி
யிடம் வணங்கிக் கூறினான்.

பயாபதி தன் நால்வகைப் படைகளையுந் தயார்
செய்துகொண்டு, மங்கலவாத்தியங்கள் முழங்கப், பல
வகை வரிசைகளுடன் சுவலனசடி தங்கியிருக்குமிடத்தை
நோக்கி, நகர்வலமாகப் புறப்பட்டான். நகரத்திலுள்ள
மக்கள் தெருநிறைந்த பந்தல்களை அமைத்தும், தோர

ணங்கள் கட்டியும் பொன்னுலகமெனப் புகழும்படி அலங்கரித்தனர். திருநிலையகம் என்னும் பொழிலைப் பயாபதி அடைந்தான் விஞ்சையர் வேந்தனான சுவலன சடி யெதிர்கொண்டு தழுவினன். விசய திவிட்டர்கள் வணங்கினர். அவர்களை வாழ்த்தினன். சுவலனசடி மகன் அருக்ககீர்த்தி பயாபதியை வணங்கி விசய திவிட்டர்களைத் தழுவினன் இவ்வாறு ஒருவர்க்கொருவர் மரியாதை செய்துகொண்டபின் சுவலனசடி அமைந்திருந்த மண்டபத்திலே தங்கினர்கள்.

பயாபதிமன்னன் சுவலனசடியை நோக்கி, 'வித்தியாதரமன்னராகிய தங்கள்வரவு எமக்குப் பெருமகிழ்வையளிக்கிறது தங்களை வரவேற்பது எம்போன்ற மண்ணுலக அரசர்க்குக்கிடைப்பது அருமையே' என்று முகமன் கூறினன். சுவலனசடி அதைக்கேட்டு நகைத்து, 'வித்தியாதரர்களை மேன்மையாகக் கருதி நீங்கள் பேசுகிறீர்கள். அவர்களும் புண்ணியதீர்த்தங்கள் ஆட மண்ணுலகுக்கே வருகின்றனர். விண்ணவர் பலர் மண்ணவர் துணையாலே தங்கள் பகைதீர்ந்து மகிழ்ந்தனர். மேலும், எம்மகள் சுயம்பிரபை தங்கள் இளைய திருமகனர் திவிட்டர்க்கே உரியவளென்று சோதிடம் வல்லோர் சொன்னர்கள் ஆகையால், மண்ணுலகை இகழ்ந்தும் விண்ணுலகைப் புகழ்ந்தும் விளம்புவது சரியன்று' என இயம்பினன்.

இவர்கள் இவ்வாறு உரையாடிக் கொண்டிருக்கையில் பயாபதி மன்னனுடைய அந்தப்புர மாதர்கள், பட்டத்தரசி சசிதேவியின் கட்டளைப்படிப் பொன்னலும், மணியாலும், பட்டாலும், ஆன ஆடைகளையும் அணிகளையும் ஏந்திக்கொண்டு, சுயம்பிரபையும் அவள் அன்னையும் தங்கியிருக்கும் இடத்தை அடைந்து, அன்

புடனும் வணக்கத்துடனும் வரிசைகளை வைத்து வணங்கினர். அவர்களும் அவைகளை ஏற்று, அவர் களுக்குத் தக்க இருக்கைகளளித்து உபசரித்தனர். சசிதேவியின் பணிப்பெண்களில் ஒருத்தி ஓவியக்கலையில் வல்லவளாயிருந்தாள். அவள் தன் கைவன்மையாற் சுயம்பிரபையுடன் பேசிக்கொண்டிருக்கும்போதே, அவளுருவத்தை ஒரு பலகையில் வரைந்து, ஒருவர்க்குந் தெரியாமல் வைத்துக்கொண்டாள்.

சுவலனசடியின் சபையிலிருந்த விசய திவிட்டர்கள், தங்களுக்கு மைத்துனனாகப்போகும் அருக்ககீர்த்திக்குப், போதனமாநகரைச் சுற்றிக்காட்ட அழைத்துக்கொண்டு புறப்பட்டனர். மூவரும் மூன்று யானைகளின்மீதேறினர். அவர்களைச் சுற்றி மெய்க்காப்பாளர்களும் வீரர் களும் சூழ்ந்தனர். இவ்வாறு வெளிவரும்போது சுயம் பிரபை தன் தோழிகளுடன் தான் தங்கியிருந்த மாளிகை யின்மீதேறி நகரின் அழகை நோக்கியிருந்தாள். அப் போது யானைமீது செல்லும் திவிட்டனைப் பார்த்தாள். திவிட்டனும் தற்செயலாக சுயம்பிரபையை நோக்கினன். இருவரும் ஒருவரையொருவர் பார்த்து வியந்து காதல் கொண்டனர். அருக்ககீர்த்தி இவர்கள் நோக்கிக்கொள் வதைப் பார்த்துப் புன்முறுவல் கொண்டான்; ‘நகர் வலம் காணப் போகவேண்டுமே’ என எச்சரித்தான். திவிட்டன் தன் பார்வையைத் திருப்பி மைத்துனன் கூறிய மொழியால் வெட்கப்பட்டு, யானையை நடத்திக் கொண்டு சென்றான். சுயம்பிரபை திவிட்டனிடம் சென்ற தன் பார்வையை மெதுவாக மாற்றிக்கொண்டு தன் தோழிகள் காணுவண்ணம் நின்றாள்.

சசிதேவியின் பணிப்பெண்கள் சுயம்பிரபை யிடமும் அவளன்னையினிடமும் விடைபெற்றுக்

கொண்டு, சசிதேவியின் அந்தப்புரத்தையடைந்தனர். சுயம்பிரபையின் ஓவியத்தைச் சசிதேவியிடம் காண்பித்தனர். அவள் அதைக்கண்டு வியப்படைந்து மகிழ்ந்து, எழுதிக்கொண்டு வந்தவளுக்கு வேண்டிய பரிசு கொடுத்தாள். பிறகு, அதைத் திவிட்டனிடங் காட்டக் கொடுத்தனுப்பினாள். திவிட்டன் தான் சுயம்பிரபையையே நேரிற் பார்த்துவிட்டானே!

பயாபதிமன்னன் வித்தியாதர அரசனோடு உரையாடி யிருந்ததன்பின் விடைபெற்றுத், தன் அரண்மனையடைந்தான். அமைச்சர்களுடனிருந்து திருமணத்திற்கு வேண்டிய பொருள்களைச் சேர்த்தான். அன்றைக்கு மறுநாள் அருகக்கடவுளுக்கு வழிபாடு செய்வதென்றும், மூன்றும் நாள் திருமணமென்றும் முரசறையக் கட்டளையிட்டான்.

வள்ளுவன், திருமண முரசை யானையின்மீது ஏற்றி, அருகக்கடவுளின் வழிபாட்டையும், திருமணத்தையும், முரசறைந்து தெரிவித்தான். நகரமக்கள் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் வீடுகளிலே, திருமணம் நடைபெறுவதைப்போல மகிழ்ந்து அலங்காரம் செய்தனர். அரசகுமாரன் திருமணம் என்றால் சொல்ல வேண்டுமா?

முதல் நாள் அருக வழிபாடும், மறுநாள் திவிட்டன் சுயம்பிரபை திருமணமும் நடந்தேறின. திருமணத்தைத் தொடர்ந்து பலநாட்கள் வரையிலே, திருவிழாப்போன்ற கொண்டாட்டங்கள் நடந்தன. திருமணம் முடிந்த பின்னர், சுவலனசடி தன்மகளுக்குக் கொடுக்கவேண்டிய வரிசைகள் பலவற்றையுங் கொடுத்துவிட்டுத், தன் சுற்றத்துடன் இரதநூபுரநகரத்திற்குச் செல்லத் தயாராக இருந்தான்.

## 4. அச்சுவகண்டன் படையெழுச்சி

போதனமாநகரத்தில் இவ்வாறு இவர்கள் இருக்கும்போது, இரத்தின பல்லவத்தில் நிகழ்ந்ததென்னவென்று பார்ப்போம்.

சிங்கமாகவந்த அரிகேது அச்சத்துடன் ஓடிப்போய்த், தன்னை அனுப்பிய அரிமஞ்சு என்னும் அமைச்சனிடங் கூறினன். அரிமஞ்சு அதைக் கேட்டுத் திகைத்துச், சிலநாள்வரை சிந்தித்து, அவனையே அச்சுவகண்டனிடம் கூறும்படி அனுப்பினான். அரிகேது அவ்வாறே அரசனிடஞ் சென்றான்.

பல மன்னர்கள் சூழ, அரசு வீற்றிருந்த அச்சவகண்டனை வணங்கித், திவிட்டன்சிங்கத்தின் வாயைப்பற்றிப் பிளந்த வல்லமையை விளக்கமாகக் கூறினான். அரசன் இதைக் கேட்டுக் கோபங்கொண்டு நகைத்தான். அந்த ஒலியைக் கேட்டவர்கள் நடுங்கினார்கள். எதிரேயிருந்த ஒரு வயிரத்தூணைக் கைகளால் அறைந்தான். அத்தூண் பொடிப் பொடியாயிற்று. 'அரிகேதுவே! நீ ஒரு விஞ்சையனாக இருந்தும், இப்படி அவனைக் கண்டு நடுங்கி விட்டதன்றியும், வெட்கமின்றி என்னிடம் கூறவும் வந்தாய்! இது 'புலி பூனையைக்கண்டு அஞ்சியது' என்று கூறுவதுபோல இருக்கிறதே! என் முன் நில்லாதே!' என்று வெருட்டினான். அரிகேது நடுநடுங்கிக் கையைத் தலைமேற் குவித்தவண்ணம் நின்றான். சபையிலுள்ளோர் பேச்சு மூச்சில்லாமலொடுங்கினர்.

இந்த நிலையிலே ஒரு தூதன் வந்து வணங்கி, 'அரசர்க்கரசே! இரதநூபுரத்தரசர் சுவலனசடியென்பவர், தம் மகளைப் போதனமாநகரத்தரசர் குமாரனுக்கு மணஞ்செய்து கொடுத்தனர்' என்று விண்

ணப்பித்துக்கொண்டனன். அச்சொற்களைக் கேட்டவுடன் அரசன் சினம் அதிகரித்தது. கண்கள் சிவந்தன. பற்களை நறநறவென்று கடித்தான். உடல் துடித்தது. கையோடு கை தாக்கினன். எழுந்தான்; அமர்ந்தான்; உலாவினன். பிறகு, அருகிலிருந்தவர்களை நோக்கி, 'நம்மைச் சார்ந்த அரசர்களையெல்லாம் படைதிரட்டிக் கொண்டுவரக் கூறுக' என்றான். அவ்வாறே அவர்கள் முரசறைந்து தெரிவித்தனர். அரசர்களும் வந்து சேர்ந்தனர்.

வந்த அரசர்கள் அச்சுவகண்டனுடைய சினத்தைக் கண்டு யாதோ என்று கலங்கினர். அவனுக்குப் பகைவர் யாராயிருக்க முடியும் என்று சிந்திக்கத் தொடங்கினர். அச்சுவகண்டன் அவர்களை நோக்கிச் சுவலனசடியின் செயலைக் கூறினன். அரசர்கள் அதைக்கேட்டு அமைதியடைந்தனர்.

அவர்கள் எல்லோரும், 'நம் அரசர் பெருமானை, ஏமாற்றிச் சுவலனசடி தன் மகளை ஒரு மனிதனுக்குக் கொடுத்தான். நாமோ மலைபோல உறுதியான தோள்களைச் சுமந்துகொண்டு நிற்கிறோம். இது வெகு அழகு! நாம் அவனையும் அவனைச் சார்ந்த போதனமாநகரத்தரசனையும் அவன் மக்களையும் இப்போதே அழிப்போம். இல்லாவிட்டால் இறப்பதேமேல்' என்று முடிவு செய்தனர்.

இச் செய்தியைக் கேள்வியுற்ற அவன் மகனான கனகசித்திரனும் தம்பியான வச்சிரகண்டனும் 'நாங்கள் இருக்கும்போது இப்படிப் படைதிரட்டிக் கொண்டு தாங்கள் புறப்படுவது தகுமா? சாதாரண மனிதருடன் போர் செய்வது தங்கள் கீர்த்திக்கு இழிவு;

நாங்கள் அந்தச் சுவலனசடியையும் அவன் மருமகனையும் மகளையும் தங்கள் திருவடிகளிற் கட்டிக்கொண்டுவந்து விடுகிறோம். அமைதியாக இருங்கள்' என்று வேண்டினர்.

அச்சுவகண்டன் சினம் ஒருவாறு தணிந்தது. பிறகு, அவன் அமைச்சர்களை வரவழைக்கச்சொல்லிவிட்டு 'மந்திரசாலை'யை அடைந்தான். மந்திரசாலை யென்பது ஆலோசனை செய்யும் இடம். அங்கே சென்றதும் தூமகேது அங்காரவேகன், அரிசேனன் முதலான மந்திரிகள், 'போர் செய்வதே சிறந்தது இன்றேல் நம் பெருமை சிதறும்' என்றனர். பிறகு, ஸ்ரீபாலன் என்னும் அரசன், 'எதிரிகள் மனிதர் மட்டுமல்லர். வித்தியாதரரும் உள்ளனர். மேலும் பகைப்படை வலிமை மிக்கது ஆகையால், மானிடப்படையும் மாயப்படையும் வேண்டும்' என்றான். ஆகவே யானை, குதிரை, தேர், காலாள் என்னும் நால் வகைப்படையும் மானிடப்படை மாயப்படையென்னும் வித்தியாதரப்படை ஆகிய இருவகைகளிலும் நிறைந்து போருக்கு எழுந்தனர். சுவலனசடியின் நகரைக் கொளுத்தவும் அவர்கள் திட்டமிட்டனர். அச்சுவகண்டன் இவ்வாறு போருக்குக் கிளம்புவதைச் சுவலனசடியின் ஒற்றர்கள் அறிந்துவந்து போதன் மாநகரிலிருக்கும் தங்கள் அரசனிடங்கூறினர்.

## 5. போரும் அச்சுவகண்டன் அழிவும்

### திவிட்டனின் போர் முயற்சி

சுவலனசடி தன் மகனையும் மருமக்களையும் பயாபதி மன்னனையும் வரவழைத்து இச்செய்தியைக் கூறினான். எல்லோரும் அச்சுவகண்டனை எதிர்ப்பதென்றே துணிவு கூறினர். அவர்களில் திவிட்டனின் தெய்வத் தன்மைபொருந்திய வல்லமையைப் பார்த்திருந்தவனாகிய சுவலனசடி அவனை அருகே வரவழைத்து, விஞ்சையர் அறிந்த மாய வித்தையையும் மந்திர எழுத்துக்களையுங் கற்பித்தான். திவிட்டன் மிகுந்த கவலையுடன் அவைகளை அறிந்துகொண்டு பயிற்சி செய்தான். அப்போது மாய வித்தைக்குரிய தேவதை திவிட்டனெதிரில் வந்து, 'அரச குமாரனே! யான் செய்யும் பணி என்ன?' என்று வினவியது. அவன் அதற்குரிய வழிபாடுகளைச் செய்து, 'நான் தங்களை வேண்டியபோது என்முன் வந்து எனக்கு உதவிசெய்யவேண்டும்' என வேண்டிக்கொண்டான். அதுவும் இசைந்து சென்றது.

இங்கிலையில், அச்சுவகண்டனுடைய தூதர்கள் வான் வழியாக வந்து, அங்குள்ளவர்களை நோக்கி, 'நாங்கள் அச்சுவகண்டருடைய தூதர்கள். அவர் சுவலனசடியின் மகளையாவது, அப்பெண்ணை மணந்தவனுடைய தலையையாவது விரும்புகிறார். இரண்டில் ஒன்றைக் கொடுங்கள்' என்றனர்.

திவிட்டன் இம்மொழியைக் கேட்டவுடன் சினங்கொண்டான். இடிபோல நகைத்தான். அவன் இதழ்கள் துடித்தன. கண்கள் சிவந்தன. சினம் மிகமிக உடல் பெரிதாக வளர்ந்தது. திருமாலைப்போலவே பெருவடிவங் கொண்டான். அருகிலிருந்தவர்களெல்லோரும்

வியப்பும் மகிழ்வும் அடைந்தனர். இவ்வாறு வளர்ந்த திவிட்டன், 'தூதர்களே! நீங்கள் ஓடிப்போய் உங்கள் அரசனிடம் இம்மாதிரி பெண்கள்போலப் பேசிக் கொண்டிராமல் உடனே போருக்கு வரச்சொல்லுங்கள். வீரர்கள் வாளினால் பேசுவார்களே அல்லாமல் வாயினால் பேசமாட்டார்கள்' என்றான்.

அப்போது உடனிருந்த அரசர்கள், 'சுயம்பிரபையின் திருமணத்தை முதலிலேயே அறிந்திருந்தும் மணம் முடியும் வரையில் எங்கேயோ இருந்துவிட்டு மணம் முடிந்தபிறகு வீரம் பேசுதல் பேடியின் செயலேயாகும். அச்சுவகண்டனுடைய ஆட்சியையும் ஆழியையும் எங்கள் திவிட்டருக்கு அளித்தபிறகுதான் எங்கள் வல்லமையை அவன் அறிவான். அதுவரையில் வாய் வீரம் பேசுவது நடக்கட்டும்' என்று அவனை இகழ்ந்து கூறினர். அப்போது வானத்திலிருந்து, 'நாளையபோரில் அச்சுவகண்டன் தலையைத் திவிட்டன் அரிந்து வெற்றி பெறுவான்' என்ற மொழி உண்டாயிற்று. திவிட்டன் உடம்பைச்சுற்றி அப்போது ஒரு பேரொளி சூழ்ந்தது. நல்ல சகுனம் உண்டாயிற்று.

தூதுவர்கள் திவிட்டனுடைய தெய்வத்தன்மை பொருந்திய பெருவடிவத்தைக்கண்டும், அவனும் மற்ற அரசர்களுங்கூறிய விடையைக் கேட்டும் அச்சமுற்றோடி அச்சுவகண்டனிடம் அலறிக்கொண்டு கூறினர். அவன் அதைக்கேட்டு நகைத்துத் தன்முன்நின்ற வித்தியாதர அரசர்களை நோக்கிப் 'போதனமாநகரம் சென்று சுவலனசடியையும் சுயம்பிரபையையும் திவிட்டனையும் பிடித்து வாருங்கள்' என்றான். அப்போது இரத்தினபல்லவம் எங்கும் தீய சகுனங்கள் உண்டாயின.

போரில் அச்சுவகண்டன் இறத்தல்

இரத்தின பல்லவத்திலிருந்து புறப்பட்ட வித்தியா தர அரசர்கள் நால்வகைப் படையுடன் சென்று போதனமாநகரை வளைத்தனர். அவர்களைக்கண்ட அருக்ககீர்த்தி சிறிது படையுடன் சென்று எதிர்த்து முறியடித்தான். பலர் இறந்தனர். இதை அச்சுவ கண்டன் அறிந்து சினங்கொண்டு உறவினருடனும் தம்பிமாருடனும் மகனுடனும் புறப்பட்டுப் போதன மாநகருக் கருகேயுள்ள அருங்கலம் என்னும் குன்றிலே பாசறை அமைத்துத் தங்கினன்.

முதலில் உறவினர் சென்று போர்செய்து மடிந்த னர். பிறகு, கனகசித்திரன் தன் சிற்றப்பன்மாருடன் சென்று திவிட்டனுடைய சேனைகளைக் கலக்கினான். அப்போது விசயன் தெய்வத்தன்மையால் அப்போது தான் கிடைத்த கலப்பை ஆயுதத்தால் அவர்களை அழித் தான்.

அப்போது ஒற்றர்கள் சென்று அச்சுவகண்ட னிடம் இவர்கள் மடிந்ததைக் கூறினர். கலங்காத அச்சுவகண்டன் இதைக்கேட்டுக் கலங்கினான்; திகைத் தான்; கண்ணீர் வடித்தான். பிறகு, ஒருவாறுதேறி, இவ்வுலகிலுள்ள உயிர்களையெல்லாம் வாரிக் கடலுள் வீழ்த்தும் மாயாதேவியை நினைத்தான்.

சண்டவேகை என்னும் பெயருள்ள அந்தத்தெய்வம் அவன்முன் தோன்றியது. 'இப்பூமியில் என்னை எதிர்த்த பகைவர் யாருமே இல்லாதவண்ணம் அவர்களையெல் லாம் ஒழித்து எனக்கு உதவி செய்க' என்று வேண்டி னான். அத்தெய்வம் அதற்கு ஒப்புக்கொண்டது. பிறகு, எமனை அழைத்து, 'இன்று உனக்கு நல்ல விருந்து, நான்

எல்லா உயிர்களையும் அழிக்கப்போகிறேன்' என்று கூறியது. பேய்களும் பிசாசுகளும் அதைச் சூழ்ந்து சென்றன. சூலமேந்திச்சென்ற அந்தத் தெய்வஞ்செய்த மாயத்தினாலே பெருங்காற்று ஒன்று எழுந்து வீசியது. அதனால் மலைகளும் மரங்களும் நிலைபெயர்ந்து உருளத் தொடங்கின. எல்லா இடங்களிலும் தீயெழுந்தது. கடலும் அலைவீசி மேலெழுந்தது. உலகமெங்கும் மறையும்படி இருளுண்டாகும் வண்ணம் ஒரு பெரிய மலையைப் பெயர்த்தெடுத்து அந்தத் தெய்வம் மூடியது. அதனாற் பயாபதி மன்னனுடைய படைவீரர்கள் கண் தெரியாமல் திகைத்தனர். ஒருவரோடொருவர் முட்டிக் கொண்டனர்.

திவிட்டன் இதைக்கண்டு அருக்ககீர்த்தியை இது என்ன என்று வினவினான். அவன், 'இது அச்சுவகண்டன் ஏவிய மாயாதேவதையின் செயல்போலிருக்கிறது. அதைத் தடுக்கக்கூடியவர் எவரும் இலர். அது நம் மெல்லோரையும் அழித்துத்தான் செல்லும்' என்று அச்சத்துடன் கூறினான்.

அதைக்கேட்ட திவிட்டன் நகைத்து, 'நல்லது! ஒரு பேய் நம்மைக் கொல்ல வருமாம். நாம் அதைக்கண்டு அஞ்சுவதாம்.' என்று கூறிச் சினந்து திருமால் போலப் பெருவடிவம் எடுத்தான். அப்போது அவன் வலக்கரத்திலே பாஞ்சசன்னியம் என்னும் சங்கு வந்தது. இடக்கரத்தில் சாரங்கம் என்னும் வில் வந்தது. அவ்வாறு அவை வந்து சேர்ந்தவுடன் சங்கை வாயில்வைத்து ஊதினான். அவ்வொலியால் எல்லோரும் செவிடர்போலாயினர். வில்லைவளைத்து நாணொலி யுண்டாக்கினான். வாயினால் ஒருமுறை ஊங்காரம் செய்தான். சண்டவேகை திவிட்டனுடைய பேருருவத்தையும் ஆரவாரத்தையும்

பார்த்து அஞ்சித் தன் மாயத்தை மறைத்துக்கொண்டு ஓடிவிட்டது.

அதைக்கண்ட அச்சுவகண்டன் நகைத்து, 'இப்பேயின் வல்லமை இதுதானு?' என்று இகழ்ந்து கூறித் தன் பட்டத்து யானையைக்கொண்டுவரும்படி கூறினுன். அதன்மேல் ஏறிக்கொண்டு திவிட்டனை எதிர்த்தான். அப்போது பெரிய வடிவமுள்ள கருடவாகனம் தன் சிறகுகளை விரித்துப் பறந்துவந்து திவிட்டன்முன் நின்றது. திவிட்டன் அதன்மேல் ஏறினுன்.

அச்சுவகண்டன், 'சிறுவனே! தேவர்களும் அசுரர்களும் என்முன் போர்செய்ய முடியாமற் பாதத்தில் வணங்கிச்சென்றனர். உன்னுடன் போர்செய்வது இழிவு என்றிருந்தேன். எனினும், உன் சுடுசொல் என்னை வருத்துவதால் எதிர்த்தேன். உயிரை யிழக்காமல் திரும்பிச்செல்ல இன்னும் உனக்குச் சந்தர்ப்பங் கொடுக்கிறேன்' என்ருன். திவிட்டன், 'இன்னுமா உனக்கு வீரவாதம்? பேச்சினுல் வெல்ல ஆசைப்படாதே. ஆயுதங்களினுற் போர்செய்து வெல்வதுதான் நன்று' என்று எதிர்த்தான்.

அச்சுவகண்டன் சினந்து கணைகளை ஏவினுன். அவைகளெல்லாம் கருடனுடைய சிறகுக் காற்றினுல் நடுவிலேயே விழுந்துவிட்டன. பிறகு, தெய்வத்தன்மை பொருந்திய பெருங்கணைகளைவிட்டான். அவைகளையும் திவிட்டன் அழித்தான். இறுதியிலே தன்னுடைய ஆழியை எடுத்து மந்திரங்கூறித் திவிட்டன்மேல் எறிந்தான். அப்படையைக்கண்டு எல்லோரும் அஞ்சினர். அதன் ஒளியிலே திவிட்டன் இருந்த இடமே தெரிய

வில்லை. 'திவிட்டன் தப்புவதெப்படி' என்று எல்லோரும் மயங்கினர். அச்சமயத்தில் திவிட்டன் பக்கம் சென்ற அந்த ஆழி அவனை வலம்வந்து நின்றது. அவன் அதைக் கையில் ஏந்தித் திருப்பி அச்சுவகண்டன்மேற் செலுத் தினன். அது அச்சுவகண்டனை வீழ்த்தியது. இவ்வாறு அச்சுவகண்டன் தன் வாழ்நாளை முடித்துக்கொண்டான். திவிட்டனைச் சுவலனசடியும் பயாபதியும் வாழ்த்தினர். விசயனும் அருக்ககீர்த்தியும் அன்புடன் தழுவிக் கொண்டு ஆனந்தமடைந்தனர். அப்போது, வானத்தி லிருந்து, 'திவிட்டகுமாரன் அச்சுவகண்டனை வென்று ஆழியைக் கைக்கொண்டது வியப்பினும்வியப்பு!' என்ற மொழி எழுந்தது. அரசர்களெல்லோரும் ஆரவாரித் தனர்.

பயாபதிமன்னன் அரசர்களைநோக்கி, 'அரசர்களே! என் மக்களால் நான் அடைந்த பேறு மிகவும்பெரியது; மற்றோர் அடையாதது. ஆகவே, என் மகிழ்ச்சி அளவில் லாததாகிவிட்டது. உங்களுக்கும் அவ்வாறிருக்குமென நம்புகிறேன். இனி, அவர்களுக்கு என் முடியைச் சூட்டிப்பார்க்க ஆவல்கொள்கிறேன். நீங்களெல்லோரும் இனிதிருந்து அந்த முடிசூட்டு விழாவை நடத்திவைக்க வேண்டுகிறேன்' என்று கூறினன். அரசர்களெல் லோரும் மகிழ்வுடன் ஒப்பினர்.

## 6. முடிசூட்டு விழா

வள்ளுவன் யானைமீதேறித் திவிட்டகுமாரனுக்கு முடிசூட்டு விழாவென முரசறைந்து நகரமெங்கும் அறிவித்தான். நன்னாளிலே தூயகங்கை முதலிய நதிகளிலிருந்து கொண்டுவந்த நீரைப் பொற்குடங்களின் மூலமாக வார்த்துத் திவிட்டனையும் விசயனையும் நீராட்டினர். பிறகு, விஞ்சையரும் பூமியிலுள்ளவரும் வாழ்த்த ஒளிவீசும் மணிமுடியைத் திவிட்டன் தலையிலே சூட்டி' 'இவனே வசுதேவன் மகனான வாசுதேவன் என்னுங் கண்ணன்' எனக்கொண்டாடினர். அவ்வாறே விசயன் தலையிலே மணிமுடியைச்சூட்டி, 'இவன் உருவத்தாலும் படைக்கலப்பயிற்சியாலும் வீரத்தாலும் பலராமனே யாவன்' என்று கொண்டாடினர்.

பெரியோர்களெல்லாரும் ஆசி கூறினர். மங்கல வாத்தியங்கள் ஒலித்தன. புலவர்கள் கவிபுனைந்து வாழ்த்தினர். அரசர்களெல்லாரும் முறைப்படி வணங்கி வாழ்த்தினர். இச்சமயத்தில் முன்பே கிடைத்த சங்கு சக்கரம் வில்லோடு தண்டும் வாளும் வந்து சேர்ந்தன. ஆகவே, திவிட்டன் சுதரிசனம் என்னும் சக்கரமும், பாஞ்சசன்னியம் என்னும் சங்கும், சார்ங்கம் என்னும் வில்லும், கௌமோதி என்னும் கதையும் (தண்டும்), நாந்தகம் என்னும் வாளும் ஆகிய ஐந்து படைகளையும் ஏற்றுத் திருமாலே போன்றவனானன். மேலும், சங்கநிதி பதுமநிதி முதலிய நிதிகளும், சிந்தாமணி சூளாமணி முதலிய மணிகளும் வந்து சேர்ந்தன. திவிட்டன் ஐம்படைகளுக்கும் ஐந்து கோயில்களமைத்தான். கருடனுக்கும் ஓர் கோயிலமைத்தான். வித்தியாதர உலகைத் தன் மாமனாரான சுவலனசடிக்கே அளித்து விட்டுத் தன் நாட்டை இனிது ஆண்டுவந்தான்.

## 7. நீதிகளும் பயிற்சிகளும்

நீதிகள் :—

1. எத்தனை துன்பம் நேர்ந்தாலும் பெண்ணைத் தக்க கணவனுக்கே மணஞ்செய்து கொடுக்கவேண்டும்.

2. திறனும் முயற்சியும் உடையவர் எத்தகைய வலிமிக்க பகைவரையும் எளிதில் வென்றுவிடுவர்.

3. உருவுகண்டு எள்ளாமை வேண்டும்.

பயிற்சிகள் :—

1. சயம்பிரபையை ஏன் அச்சுவகண்டனுக்கு மணஞ்செய்து கொடுக்கவில்லை ?

2. சோதியுடன் கூறியது நிறைவேறியதா ? எப்படி ?

3. சிங்கத்தின் வாயைப் பிளந்த வரலாற்றைக் கூறுக.

4. இக்கதையையே சுவலனசடி மன்னன் கூறுவதுபோன்று எழுதுக.

5. விசயன் கூறுவதுபோன்று எழுதுக.

6. பயாபதி மன்னனும், சயம்பிரபையும் திவிட்டனின் வரலாற்றைக் கூறுவதுபோல எழுதுக.

7. இக்கதையால் நீ உணரும் நீதிகள் யாவை ?